Ū*l*iya*n*

Malar 19, ita*l* 45

May 09, 1940

Record no. 148

REG. NO. M. 3888
12 பக்கங்கள்
விலை அணா ஒன்று

# ஊழியன்

சந்தா விகிதம்
உள்நாடு வருடச் சந்தா .... 5—0—0
பர்மா வருடச் சந்தா .... 6—0—0
வெளிநாடு வருடச் சந்தா .... 7—0—0

விளம்பர விகிதம்
அங்குலம் 1-க்கு வாரம் 1-க்கு 0—8—0
நீதிமன்ற விளம்பரம் அங். 1-க்கு 1—0—0
ஒப்பந்த விளம்பரத்திற்கு மானேஜருக்கு எழுதவும்

(தேசிய வாரப் பத்திரிகை)
வியாழன் தோறும் வெளிவருவது

மலர் 19 | காரைக்குடி, விக்கிரம ஹூ சித்திரைமீ 27உ. வியாழன் (9—5—1940) | இதழ் 45

'ஹரிஜன்' கட்டுரைகள் ★ மகாத்மாவின் மணிமொழிகள்

## இந்தியாவில் அராஜகம் ஏற்பட்டால் பிரிட்டனுக்குத் துன்பம்

### இஸ்லாம் போதிப்பது என்ன?

★

### அஹிம்சையால் பயன் யாது?

இத் தலைப்பின்கீழ் இவ்வார 'ஹரிஜனி'ல் மகாத்மா ஒரு கட்டுரை எழுதியிருக்கிறார். அதில் குறிப்பிட்டிருப்பதாவது:—

பலாத்காரத்தினால் பயனில்லையென்பதை இந்த யுத்தம் காட்டிவிட்டது. நார்விஜியர்களும் டேனிஷ்காரர்களும் கலைஞானத்தில் வல்லவர்கள். பிறருக்குத் துன்பம் விளைவிக்காதவர்கள். ஒருக்கால் ஹிட்லர் இந்த யுத்தத்தில் ஜெயித்துவிட்டால் இங்கிலாந்தையும் பிரான்ஸையும் அவர் அடிமைப்படுத்த மாட்டார். அவ்விதம் செய்தால் மற்றொரு யுத்தம்தான் சம்பவிக்கும். நேச தேசத்தினர் ஜெயித்துவிடுவதாக வைத்துக்கொள்வோம். அப்போதும் நிலைமையில் மாறுதல் ஏற்படாது. அஹிம்ஸை என்பதின் முதல் நிபந்தனை எல்லாத்துறைகளிலும் நியாயமிருக்கவேண்டும். இந்தியாவில் அஹிம்ஸை பூர்ணமாக இல்லாமையால் கலையில் வல்ல மேனாட்டுக்கு இந்நாட்டினால் ஒரு நன்மை இன்னும் ஏற்படவில்லை. இந்தியாவிலேயே பிரிந்து நாம் சிதறுண்டு இருக்கிறோமல்லவா?

ஏழை இந்தியா அஹிம்ஸையைத் தவிர வேறு எதை உலகத்துக்கு வழங்கமுடியும்? அதையும் வழங்கக்கூடியபடி பரிபூர்ண நிலைமையில் இந்தியா தற்போதில்லை. இந்தியா அஹிம்ஸா மூலம் சுதந்திரம் அடைந்த பின்னர்தான் அந்த அஹிம்ஸையையும் அது சரியாக பிறருக்கு வழங்கமுடியும்.

பிரிட்டனுக்குக் காங்கிரஸ் எவ்விதத் துன்பமும் இழைக்க நினைக்கவில்லை. பிரிட்டனுக்குத் துன்பம் நேரிடக்கூடிய ஒரு காரியத்தையும் நான் செய்யப்போவதில்லையென முன்னமே சொல்லியிருக்கிறேன். இந்தியாவில் அராஜகம் ஏற்பட்டால்தான் பிரிட்டனுக்குத் துன்பம் வரும். ஆனால் காங்கிரஸ் எனது கட்டுக்கடங்கி நடக்கும்வரையில் அது அராஜகத்தை ஆதரிக்காது.

பிரிட்டன் தாழ்வடைந்தால் நான் அதிக வருத்தமடைவேன். இந்தியா விஷயத்தில் அதிகாரத்தை பிரிட்டிஷ் அடியோடு விட்டுக் கொடுத்தாலன்றி காங்கிரஸ் மனப்பூர்வமான அநுதாபம் காட்டமுடியாது. முன்னால் நடந்த யுத்தகாலத்தில் நான் ஆட்களைத் திரட்டி அனுப்பினேன். ஆனால் அப்போது அஹிம்ஸாக் கொள்கையைக் காங்கிரஸ் ஏற்றுக் கொள்ளவில்லை. என் சொந்த ஹோதாவில் என் விருப்பப்படி நான் நடந்தேன். யுத்த மகாநாடுகளுக்கும் அப்போது நான் போயிருந்தேன். எனது தேக சுகத்தையும் கருதாது அப்போது ஆள் சேர்க்க அலைந்துவந்தேன். ஆயுதம் தரிக்க உரிமை வேண்டுமானால் ராணுவ சர்வீஸை ஏற்றுகென அப்போது பொது ஜனங்களுக்கு எடுத்துச் சொன்னேன். ஆனால் இப்போது நிலைமை மாறிவிட்டது. இந்தியாவிலிருந்து அப்போது பிரிட்டனுக்கு ஏகமனதான ஆதரவு கிடைத்தும், இந்தியாவுக்கு அவர்களிடமிருந்து ரௌலட் சட்டம் முதலியன பதில் கிடைத்தன. பிரிட்டிஷார் விளைத்த இந்த தொல்லையினின்றும் தப்பக் காங்கிரஸ் அஹிம்ஸா முறையாகிய ஒத்துழையாமையைக் கைக் கொண்டது. அதனால் யுத்தத்துக்கு ஆளை அனுப்பும்படி நாம் செய்வதற்கில்லை. காங்கிரஸ் மூலம் நான் அதைவிட சிறந்த உதவியை பிரிட்டனுக்குச் செய்யக்கூடும். ஆனால் பிரிட்டனுக்கு அது தேவையில்லை போலும். எனக்கு எண்ணம் இருக்கிறது. வகையில்லையே. என் செய்வேன்.

### ஹிந்துக்களைப் பகைக்கவா இஸ்லாம் போதிக்கிறது

பிரிவினை யோசனை அசத்தியமானதென்று நான் கூறியிருக்கிறேன். அதற்கு நாம் இடங்கொடுக்கக்கூடாது. ஆனால் எட்டுகோடி முஸ்லீம்களும் விரும்பினால் அது ஏற்பட்டேதீரும். கண்ணியமான ஒப்பந்தத்தினால் அது ஏற்படாது. இஸ்லாம் என்பது தனிப்பட்ட சகோதரத்துவமென்றும், அது ஹிந்துக்களுக்கு விரோதமானதென்றும் நம்பப்படுகிறது. பிரிவினைப் பிரசாரம் நடத்திவரும் பத்திரிகைகளில் வெளியாகியுள்ள விஷயங்களைக் கவனித்தால் ஹிந்துக்களை தீண்டத்தகாதவர்களைப் போல் பாவிக்கவேண்டுமெனக் கூறப்பட்டிருக்கிறது. ஹிந்து மதத்தினாலோ ஹிந்துக்களினாலோ ஒரு நன்மையும் ஏற்படாதென்றும் ஹிந்து ஆட்சியின்கீழ் வசிப்பது பாவமென்றும், ஹிந்துக்களும் முஸ்லீம்களும் கூடிவாழ்வது கூடாதென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

முஸ்லீம்கள் ஹிந்துக்களின் ஜென்ம விரோதிகள் என்று ஹிந்துக்கள் எண்ணிய காலமுண்டு. ஆனால் கடைசியில் விரோதியுடன் சமரசமாகப் போவது ஹிந்துமதத்தின் வழக்கம். இது சம்பந்தமாக ஸ்ரீ அதுலானந்த சக்கிரவர்த்தி எழுதிய புத்தகத்தை நான் படித்து முடித்தேன். ஒவ்வொரு மதத்திலும் உள்ள நல்ல விஷயங்களைக் காணவே நிபுணர்கள் ஆதியிலிருந்து முயன்று முன்வந்திருக்கிறார்கள். என அந்நூலில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. சர். ஷாபத் ஆமத்கான் இந்நூலுக்கு அழகான முகவுரை வழங்கியுள்ளார். இஸ்லாத்தின் வளர்ச்சிபற்றி இப் புத்தகத்தில் கூறப்பட்டுள்ள விஷயங்கள் உண்மையாயின் பிரிவினைப் பிரசாரம் இஸ்லாத்துக்கே விரோதமானதாகும்.

மதம் என்பது என்ன? மனிதனையும் ஆண்டவனையும், மனிதனையும் மனிதனையும் பிணைப்பதுதான். இஸ்லாமிய மதம் முஸ்லீமையும் முஸ்லீமையும்தானா பிணைக்கிறது? ஹிந்துக்களைப் பகைத்துக்கொள்ளும்படியா அது போதிக்கிறது? முஸ்லீம்களிடையே ஒற்றுமையை வளர்த்து ஹிந்துக்களையும் முஸ்லீம்களல்லாதாரையும் விரோதித்துக்கொள்ள வேண்டுமென்று நபிகள் நாயகம் உபதேசித்தாரா? இத்தகைய விஷத்தை இஸ்லாத்திடையே பாய்ச்சுபவர் இஸ்லாத்துக்கே துரோகமிழைக்கின்றனர். இது இஸ்லாமிய மதமல்லவென்பது எனக்குத் தெரியும். நான் இருபது வருஷங்களாக முஸ்லீம்களுடன் நெருங்கிப் பழகியிருக்கிறேன். இஸ்லாம் ஹிந்துக்களுக்கு விரோதமான மதமென்று ஒரு முஸ்லீம்கூட என்னிடம் சொன்னதில்லை.

### முஸ்லீம் ஆட்சி இந்திய ஆட்சியே

மகாத்மா காந்தியிடம் அபூர்வமான கேள்வியொன்றை ஒருவர் அனுப்பிவைத்தார். அந்தக் கேள்வியும் அதற்கு மகாத்மாவின் பதிலும் இவ்வார 'ஹரிஜனி'ல் கேள்விப் பெட்டி என்ற தலைபின்கீழ் பிரசுரமாயிருக்கின்றன.

கேள்வி: இந்தியாவுக்கு முஸ்லீம் ஆட்சியை விரும்புவீர்களா? அல்லது பிரிட்டிஷ் ஆட்சி வேண்டுமா? தங்களுடைய அபிப்பிராயம் என்ன?

பதில்: இந்தக் கேள்வியின் அமைப்பே மகா மோசமானதாகும்.

★

கேள்வி கேட்டவர் ஒரு வெள்ளையரானபடியால் இந்தியாவானது எப்பொழுதும் அன்னியர் ஒருவரால் ஆளப்படவேண்டுமென்று தான் அவர் மனம் எண்ணும்போலும். இது அவர்களுடைய பழக்கம். அன்னியரால் ஆளப்படுவதற்கு லாயக்கானது இந்தியா என்பது கேள்வி கேட்டவரின் மனப்பான்மை.

முஸ்லீம் ஆட்சியானது இந்தியரின் ஆட்சிக்கு சமமானதேயாகும். திராவிடர், வங்காளி, மாராட்டியர், சீக்கியர், முஸல்மான்கள் ஆகியவர்களில் எவருடைய ஆட்சியும் இந்தியரின் ஆட்சியேயாகும். முஸ்லீம்களின் ஒரு பகுதியினர் தங்களைத் தனிப்பட்ட சமூகமென நினைக்கிறார்கள். ஒரு நாளும் நான் அவ்வாறு கருதவில்லை. அவர்கள் பாரதத் தாயின் புதல்வர்கள். இந்திய மண்ணில் பிறந்தவர்கள். இந்தியாவின் நாலு பக்கங்களிலுமாக எட்டுகோடி முஸ்லீம்கள் வாழ்ந்து வருகிறார்கள். இந்தியாவை ஆளும் வெள்ளையர் தொகையானது ஆளப்படும் இந்திய ஜனங்களின் மொத்த ஜனத்தொகையான 35 கோடியில் நூற்றில் ஒரு பங்குக்கும் குறைவாகவேயிருக்கிறது. ஆளப்படுபவருக்கும் ஆள்வோருக்கும் இது வெட்கக்கேடானதாகும். இருவரில் எவருக்கு அதிக வெட்கக்கேடு என்பதை அளந்துபார்க்க நான் போவதில்லை. நாம் எவ்வளவு விரைவில் பிரிட்டிஷாரிடமிருந்து விலகி சுதந்திரமடைவோமோ அவ்வளவுதூரம் இருசாராருக்கும் நன்மை உண்டு. நான் பிரிட்டிஷ் ஆட்சியைவிட முஸ்லீம் ஆட்சியையே விரும்புகிறேன் என்று சொன்னால் அதன்பொருள் தங்களுக்கு இப்பொழுது விளங்கியிருக்குமென்று கருதுகிறேன். ஹிந்துக்களும் முஸ்லீம்களும் சச்சரவுகளையும் பேதங்களையும் மறந்துவிடவேண்டும். சகோதரர்களைப்போல வாழவேண்டும். உண்மையிலேயே இந்தியாவில் பிறந்த சகோதரர்கள்தான் அவர்கள்.

எங்களுக்கிடையே மோசமான நிலைமை ஏற்பட்டு உள்நாட்டுக் குழப்பமேற்பட்டபோதிலும் சொற்ப தினங்கள்தான்—அல்லது சில மாதங்கள்தான்—அது நடைபெறும். முஸ்லீம்களும் ஹிந்துக்களும் சம அந்தஸ்துடையவர்களே; ஆனால் ஆங்கிலேயர் அந்தஸ்தும் நிலைமையும் வேறு. நாங்கள் ராணுவசம்பந்தமான பலமுடையவர்களல்ல; உங்களுடைய ஆட்சிமுறையானது எங்கள் சமூகத்தை எவ்வாறு கல்லாய் சமைக்கச் செய்து விட்டது என்பது உங்களுக்கு தெரியவாது.

சிறு கதை

# கலாவதி

★

—எஸ். கே. ஸ்வாமி

I

அது ஒரு நல்லநாளோ தீயநாளோ என்று வரையறுத்துச் சொல்ல முடியாது. அக்பர் சக்ரவர்த்தியின் அரண்மனையை மணிபுரம் ராஜகுமாரி கலாவதிதேவி அலங்கரிக்க இசைந்த தினம் என்று மட்டுமே சொல்ல முடியும். தலைநகரில் எங்கு பார்த்தாலும் தோரணங்கள் தொங்கவிடப் பட்டிருந்தன. காட்டுச் செடிகளும் வாழைக்குலைகளும் வீட்டுவாசல்களில் கட்டி அலங்கரிக்கப்பட்டிருந்தன. இவ்வளவு குதூகலமாக அன்று தலைநகரம் காணப்படுவதேன் என்று நினைக்க இடமுண்டல்லவா? இராஜபுத்திர கன்னிகையான கலாவதிதேவி மொகலாய சக்கிரவர்த்தியின் பத்னிகளிலொருவராக இருக்க இசைந்த குதூகலமும் சந்தோஷமும்தான் இவ்வளவு ஆர்ப்பாட்டங்களுக்கும் காரணம். மாலை நேரம். கதிரவன் அஸ்தகிரியை நோக்கி வெகு விரைவாக போய்க்கொண்டிருந்தான். ஒரு வேளை சூரிய பகவானுக்கு அந்த ஆடம்பரக் காக்ஷியை பார்க்கப் பிடிக்கவில்லை போலும். அதனால்தான் வேகமாக ஓடுகிறான் எனக் கருதவேண்டியிருக்கிறது.

பாங்கியர்கள் கலாவதியை அக்பர் சக்ரவர்த்தியின் பள்ளியறையில் அனுப்பிவிட்டு அகன்றார்கள். இரவு நேரமாய்விட்டது. அறையில் ஒரு பக்கம் குத்துவிளக்கு 'திமுதிமு' வென எரிந்து கொண்டிருந்தது. கலாவதி தேவி கன்னத்தில் கையை வைத்துக்கொண்டு ஏதோ ஆழ்ந்த சிந்தனையிலீடுபட்டிருந்தாள். மனதுக்கொவ்வாத மணவாளனை மணக்க நேர்ந்த வியாகூலமோ அல்லது தாய் நாட்டுக்காக இதந்தரும் இல்லற இன்பத்தைத் தூவெனத் துறந்தது முற்றிலும் சரியென்ற எண்ணமோ எது அவள் மனதில் குடிகொண்டிருந்தது என்று திட்டமாகச் சொல்லமுடியாது. சற்றுநேரம் அங்கு மிங்கும் பார்த்தாள். குத்துவிளக்கின் ஒளியும் வர வர மங்குவதற்குத் தொடங்கியது. அந்த சமயத்தில் யாரோ வரும் சப்தம் கேட்டது. திரும்பிப் பார்த்தாள். அக்பர் சக்ரவர்த்தியைக் கண்டாள். உடனேயே மிகுந்த மரியாதையுடன் எழுந்து வணக்கம் செய்தாள். ஆனால் அவளுடைய கண்கள் நிலத்தையே நோக்கின. இருவரும் சில நிமிஷ நேரம் ஒன்றுமே பேசவில்லை. பின்னர் கனிந்த குரலில் "கலாவதி, உனது விருப்பத்திற்கு மாறாக நான் நடந்து கொள்ளவில்லையென்று நினைக்கிறேன். உன் சம்மதம் பெற்றே நீ இங்கு வந்திருக்கிறாய். மேலும்........" என்று அக்பர் சக்ரவர்த்தி சொல்லி முடிப்பதற்குள் கலாவதி வெகு நிதானமாக "சாம்ராட், இந்த ஜென்மத்தில் தங்களுடைய பத்தினிமார்களிலொருவராக இருப்பதற்கு ஒப்புக்கொண்டு விட்டேன். ராஜபுத்திர ஜாதியைச் சேர்ந்த நாங்கள் நம்பிக்கைத் துரோகம் செய்பவர்களல்ல." என்று சொல்லி முடித்தாள்.

இவ்வார்த்தைகளைக் கேட்ட அக்பர் சக்ரவர்த்தியின் மனம் அடைந்த சந்தோஷத்திற்கு அளவேயில்லை. கலாவதியைப் பலமுறை பார்த்தார். பின்னர் இவ்வாறு சொன்னார் "தேவி, இன்றுதான் எனது ஜென்மம் பாக்கியமடைந்தது. உனது அதிரூப சௌந்தரியத்தைப் பருகிய எனது கண்கள் இனிமேல் எந்த ஸ்திரீயையும் பார்க்காது"

கலாவதி:—சாம்ராட், தங்களுடைய புகழுரைகளைக் கேட்டு வருந்துகிறேன். எல்லாம் அந்த ஆண்டவனின் திருவிளையாடல்.

இம்மாதிரியே சம்பாஷணை நடந்த பின்னர் சக்கிரவர்த்தியும் சந்தோஷமாகப் பிரிந்துசென்றார்.

II

அந்தப்புரத்திற்கு கலாவதி வந்தது முதல் சாம்ராட்டின் நடவடிக்கைகளே மாறிவிட்டன. எப்பொழுது பார்த்தாலும் அவளுடன் பேசிக்கொண்டிருப்பதையே விரும்புவார். வேறு அந்தப்புரப் பெண்களிடம் பேசுவதைக்கூட நிறுத்திவிட்டார். அரசியல் விஷயங்களில் அதிகமாக ஈடுபடுவதுமில்லை. கலாவதியின் கூட்டுறவு, கடமையைச் செய்வதிலும்கூட ஓரளவு சக்ரவர்த்திக்குத் தடையாய்ப் போய்விட்டது என்று சொல்வதில் தவறொன்றுமில்லை.

சாம்ராட்டின் நடவடிக்கையைப் பற்றி அந்தப்புரப் பெண்களுக்கு மனவருத்தம் ஏற்பட்டது. கூடிக்கூடி கலாவதியைப்பற்றி பேசத்தொடங்கினார்கள் அந்தப் பெண்கள். தங்களுடன் சாம்ராட் பேசாதிருப்பதற்கு மூல காரணமான கலாவதியைப் பெரிதும் வெறுத்தார்கள். ஆனால் அகில சாம்ராஜ்ய அதிபதியான அக்பரின் பரிபூர்ண கடாக்ஷம் கலாவதிக்கிருக்கையில் இந்த அபலைகளால் என்னசெய்ய முடியும்? நேற்று வந்தவளுக்கு இத்தனை பௌருஷமா என்று முணுமுணுப்பதைத் தவிர வேறொன்றும் செய்யமுடியவில்லை. எப்படியாவது சாம்ராட்டுக்கும் கலாவதிக்கும் பகைமையை ஏற்படுத்தி விடவேண்டுமென்ற தீயவேலையில் இறங்கினார்கள். பொறாமையால் புழுங்கிய அவர்கள் எப்படியாவது சாம்ராட்டுக்கு கலாவதியின்மீது அவநம்பிக்கை கொள்ளும்படியான காரியங்களைச்செய்ய வேண்டுமென நினைத்தார்கள். பொறாமைகொண்ட மனம் என்னதான் செய்யாது? கடைசியாகயாக தங்கள் காரிய சித்திக்கு ஏதுவொன்று கிடைத்துவிட்டது. கோபுரத்தில் ஏறுகின்ற குரங்குக்கு ஏணி கிடைத்தாற்போல கலாவதியைப் பற்றிய செய்தியொன்று அந்தப்புரப் பெண்களின் தீயவேலைக்கு அனுகூலமாயிருந்தது.

மணிபுரத்தில் கலாவதியோடு வஸந்தா என்னும் தோழி அந்தப்புரத்திற்கு வந்திருந்தாள். சாம்ராட்டைப் பிரிந்த நேரங்களிலெல்லாம் வஸந்தாவுடனேயே பொழுதுபோக்குவாள். கலாவதி வேறு யாரிடமும் பேசுவது கிடையாது. இயற்கையிலேயே சங்கீதத்தில் பிரேமை கொண்ட கலாவதி, வஸந்தாவின் வீணை வாசிப்பில் லயித்துப் போய்விடுவாள். வஸந்தாவுக்கும் கலாவதியை சந்தோஷப்படுத்துவதில் ஒருவித மனச் சாந்தியும் பரம திருப்தியுமுண்டு. அவளுக்கான பணிவிடைகள் முழுவதும் தானே செய்துவந்தாள். இதில் எவ்விதமான மனவருத்தமும் வஸந்தாவுக்கு இல்லை. இதைக்கண்ட அந்தப்புரப் பெண்கள் வஸந்தா உண்மையில் பெண்ணல்ல வென்றும் கலாவதியின் கள்ளக் காதலன் என்றும் சக்கிரவர்த்தியிடம் ரகசியமாகக் கூறவேண்டுமென்ற தீர்மானத்தை தங்களின் விஷயாலோசனைக் கமிட்டியில் ஏகமனதாகத் தீர்மானித்தார்கள். பின்னர் கேட்பானேன்? சாம்ராட்டிடம் வெகு சாதுர்யமாக இத் தீர்மானம் சமர்ப்பிக்கப்பட்டது. முதலில்அக்பர் இதைக்கேட்டதும் அடங்கா ஆத்திரமடைந்தார். பரிசுத்தவதியான கலாவதியைப்பற்றி தூஷணையாகச் சொன்ன ஸ்திரீகளை கடுமையாகத் தாக்கினார்; என்றாலும் எறும்பூரக் கல்லும் தேயும் என்ற பழமொழிக் கேற்ப சந்தேக அணுக்கள் சாம்ராட்டின் இதயத்தில் தோன்ற ஆரம்பித்தன. வஸந்தாவின் நடவடிக்கைகளையும் கலாவதியின் போக்கையும் கவனித்து வந்தார். மனமானது 'ராஜபுத்திரப் பெண்மையிடம் அவநம்பிக்கை கொள்ளாதே' என்று கட்டளையிட்டது. அடுத்த நிமிஷம் 'பெண்களை நம்பாதே' என்ற தோற்றம். இவ்வாறு அவரது சித்தம் அங்குமிங்கும் ஆடியது. மஞ்சட் கண்ணாடி போட்டு பார்ப்பவர்களுக்கு எல்லாப் பொருள்களும் மஞ்சள் நிறமாகத் தோன்றுவதுபோல சந்தேக உள்ளம் கொண்ட சாம்ராட்டின் மனமும் படிப்படியாக மாறுபட்டது. இந்த நிலைமையில் ஒரு தினம் அக்பர் கண்ட காக்ஷியானது அவரது இதயமண்டலத்தில் பறந்துகொண்டிருந்த சந்தேக அணுக்களை இறுகச்செய்தது. வஸந்தாவின் அதிமதுரமான வீணை வாசிப்பில் அப்படியே லயித்துப்போன கலாவதி, அக்பர் அங்குசென்று நீண்டநேரம் காத்து நின்றதைக் கவனிக்கவில்லை. இதனால் ஆத்திரங்கொண்ட சாம்ராட்டின் கண்கள் சிவந்தன. கடைசியாக சாம்ராட்டைக் கண்டதும் பயபக்தியுடன் எழுந்து நமஸ்கரித்தாள். பன்னிப் பன்னி இவ்வாறு உருக்கமாகச் சொன்னாள். "சாம்ராட், மன்னிக்க வேண்டும். தாங்கள் வந்ததை நான் கவனிக்காததற்கு என் மனம் பெரிதும் வருந்துகிறது. அறியாது செய்த அபராதத்தை க்ஷமிக்கவேண்டும்"

வஸந்தாவை வெறித்துப் பார்த்த அக்பர் 'பட பட' வென்று இவ்வாறு பதிலுரைத்தார். "ஆம். உனக்குக் கண் தெரியாதுதான். என்னைவிட வஸந்தாவின் கூட்டுறவை நீ பெரிதும் ஆசைப்படுகிறாய்; சரி, இனிமேல் வஸந்தா அந்தப்புரத்தைவிட்டு வெளியேறவேண்டும்"

இதைக்கேட்ட கலாவதி பெரிதும் ஆச்சரியமடைந்தாள். பரிசுத்தவதியான அவளுக்கு ஒன்றுமே விளங்கவில்லை. குற்றமொன்றும் செய்தறியாத வஸந்தாவை விரட்டவேண்டுமென்று சாம்ராட் திடீரெனக் கட்டளைப் பிறப்பித்ததை எண்ணி ஏக்கமும் கலக்கமும் கொண்டாள். வஸந்தாவை விட்டுப்பிரிவது என்றால் கலாவதியால் பொறுத்துக் கொண்டிருக்க முடியாது. அதற்காக சாம்ராட்டிடம் பரிந்து பேசினாள். பதிலொன்றும் கூறாது அவர் போய்விட்டார்.

> "இவ்வேழையை மன்னிக்கவேண்டும். குற்றம் முழுவதும் என்னுடையதே. கலாவதிதேவி பரிசுத்தவதி. ஆம்—நான்—நான் பெண்ணல்ல. என் பெயர் வஸந்தன்...........இந்த ஜென்மத்தில் அப்புனிதவதியை அடைய பாக்கியமில்லை யென்றாலும் அம்மாதுக்கு தொண்டு செய்து மனச்சாந்தி கொள்வதற்கே பெண் வேஷம் புனைந்தேன்."—யார் யாரை பெண் வேஷம் போட்டு ஏமாற்றினர். மன்னிப்புக்கேட்க ஏதுவென்ன? இவைகளையெல்லாம் அறிவதற்கு கதையை படித்துப் பாருங்கள்.

III

அக்பரின் மனத்தில் கலாவதியைப் பற்றிய சந்தேகம் வளர ஆரம்பித்து விட்டது. தான் அளவுகடந்து நேசித்துவந்த கலாவதி தன்னை மோசம் செய்துவிட்டாள் என்ற எண்ணமானது அக்பரை நடுங்கச் செய்தது. வஸந்தாவின் நடை உடை பாவனைகளைக் கவனித்த சாம்ராட்டுக்கு ஆண்மையின் தோற்றம் அவளிடம் இலங்குவதாகத் தோன்றியது. சந்தேகம் தோன்றிய மனத்துக்கு சர்வமும் சந்தேக மயந்தானே. ஒரு நாள் திடீரென அந்தப்புரத்துக்கு சென்ற அக்பர் வஸந்தாவுடன் விளையாடிக் கொண்டிருந்த கலாவதியை உக்ரமாக பார்த்தார். கருடனைக் கண்ட ஸர்ப்பம் போல நடுங்கினாள் தேவி. அடுத்தாற்போல அதி உக்ரமாக வஸந்தாவையும் நோக்கினார். வஸந்தாவின் மனமும் உடலும் சூறாவளியில் அகப்பட்டுக்கொண்ட மெல்லிய கொடிபோல ஆடியது. படபடப்புடன் இவ்வாறுசொன்னார். "கலாவதி, வஸந்தாவை விரட்டு என்ற என் கட்டளையை நீ அனுசரிக்கவில்லை. மேலும் நீ நம்பிக்கைத் துரோகம் செய்துவிட்டாய். ராஜபுத்திரப் பெண்மைக்கே அழியாக் கறையை ஆக்கி விட்டாய்"

கலாவதிக்கு ஒன்றுமே அர்த்தமாகவில்லை. கண்களிலிருந்து நீர்வடிய ஆரம்பித்தது. "சாம்ராட், நான் எவ்வித அபராதமும் செய்யவில்லையே. ராஜ்யகாரியங்களிலீடுபட்ட தங்களுக்கு பொழுது போக்க இடமிருக்கிறது. சதா அந்தப்புரத்திலே இருக்கும் நான் தங்களில்லாத நேரத்தில் வஸந்தாவுடன் பொழுது போக்குவதைத் தவிர என்ன குற்றம் செய்தேன்."

சாம்ராட்:- அது ஒன்றுமே போதாதா? எனக்கெல்லாம் தெரிந்துவிட்டது. இதோ நிற்கும் வஸந்தா-உண்மையில் ஒரு பெண்ணல்ல. பெண் வேஷத்தில் காணப்படும் உனது கள்ளக்காதலன்"

இவ்வார்த்தைகள் விஷம் தோய்க்கப்பட்ட அம்புகளைப்போல கலாவதியின் இதயத்தில் பாய்ந்தன. என்ன சொல்வதென்று தெரியாது திகைத்தாள். வஸந்தாவை வெறிக்கப் பார்த்தார் அக்பர். வஸந்தா கலங்கிய கண்களுடனும் மிகுந்த அச்சத்துடனும்

(11-ம் பக்கம் பார்க்க)





# சென்றவாரச் செய்தித்திரட்டு

## மைசூர் சமஸ்தானத்தில் காங்கிரஸ் வெற்றி

மைசூர் சமஸ்தானத்தில் ஜில்லாப் போர்டு தேர்தல்களில் மைசூர் காங்கிரஸ் 174 ஸ்தானங்களில் 119 ஸ்தானங்களைக் கைப்பற்றிக்கொண்டது.

## திருவாங்கூரில் ரயில்வே நிலமாற்றம்

"இந்தியாவிலுள்ள மன்னர் பிரதிநிதி, மே மாதம் முதல் தேதியிலிருந்து சில நிபந்தனைகள் பேரில், தற்காலிகமாகத் திருவாங்கூர் சமஸ்தானத்தில் செங்கோட்டைக்கும் திருவனந்தபுரத்திற்குமிடையில் தென்-இந்திய ரயில்வே வசமுள்ள பகுதியின் பேரில் சகல அதிகாரங்களையும் மேற்பார்வையையும் திருவாங்கூர் சர்க்காருக்கு மாற்றியிருக்கிறார்" என ஒரு சர்க்கார் அறிக்கை கூறுகிறது.

ஆனால் ஷை ரயில்வே லயன் சம்பந்தமாக மே மாதம் முதல் தேதியன்று அரைகுறையாக இருந்த ரயில்வே விவகாரங்கள் யாவும் இப்படிப்பட்ட மாறுதல் ஏற்பட்டாலும் முன்மாதிரி நடைபெறவேண்டும் என்பது நிபந்தனை

## சாம்ராஜ்ய பார்லிமெண்டரி மகாநாடு

அக்டோபர்—நவம்பர் மாதங்களில் நியூஜிலந்தில் நடைபெறவிருக்கும் சாம்ராஜ்ய பார்லிமெண்டரி மகாநாட்டுக்கு பர்மா ஸெனட் சபைத் தலைவரான ஊமாங்கி,பர்மா பிரதிநிதியாகச் செல்லுவார்.

## கல்கத்தா பத்திரிகைகள்மீது வழக்கு

கல்கத்தாவிலுள்ள 'ஆனந்த பஜார் பத்திரிகா' 'பாசுமதி' ஆகிய இரண்டின் ஆசிரியர்கள் பிரசுரகர்த்தாக்கள், அச்சிட்டவர்கள், ஆகியோருக்கு பிரதம மாகாண மாஜிஸ்திரேட் சம்மன் அனுப்பியிருக்கிறார். அதில் சஸ்பெண்டு செய்யப்பட்ட வங்கக் காங்கிரஸ் கமிட்டியால் தேசிய வாரம் சம்பந்தமாக ஸ்ரீ சுபாஷ் போஸ் செய்யும் பிரசங்கங்கள் அல்லது வேலைகள் பற்றிய செய்திகளை பிரசுரிக்கக்கூடாதென்ற சர்க்கார் உத்தரவை மீறியதற்காக இந்திய தற்காப்புச் சட்டத்தின் கீழ் குற்றங்களுக்கு ஜவாப் சொல்ல ஆஜராகும்படி உத்தரவிடப் பட்டிருக்கிறது.

## இத்தாலி ராணுவம் பலப்படுத்த இன்னம் 800 கோடி லீரா

இத்தாலியின் ராணுவத்தை பலப்படுத்துவதற்காக இத்தாலி யுத்தமந்திரி இலாகாவிற்கு ஏற்கனவே ஒதுக்கினது போக இன்னும் 800 கோடி லீரா ஒதுக்கப்படுவதாக அறிவிக்கப்படுகிறது. இதற்கான சட்டம் மார்ச் மாதமே நிறைவேற்றப்பட்டிருக்கிறது.

## டாக்டர்கள் கடமை

மதுரை வைத்திய சங்கத்தில் டாக்டர். டி. எஸ். எஸ். ராஜன் பேசுகையில் கிராமவாசிகளுக்கு விலை குறைவாக மருந்துகள் கிடைக்கும்படி செய்யவேண்டுமென்றும், வைத்தியர்கள் நகரங்களிலேயே கண்வைத்துக் கொண்டு, இதன்மூலம் நகரங்களில் கடுமையான போட்டி ஏற்படுவதைத் தாம் கண்டிப்பதாகவும், வைத்தியர்கள் குறுகிய நோக்கத்துடனில்லாமல் தற்கால இந்திய நிலைமையையும், வருங்கால இந்தியாவின் நிலைமையையும் கவனித்து நடந்து கொள்ளவேண்டுமென்றும் குறிப்பிட்டார்.

## அமெரிக்க விமானவிற்பனை

இந்த வருஷத்தின் முதல் மூன்று மாதங்களில், சுமார் 660¾ லக்ஷம் டாலர்கள் பெறுமானமுள்ள விமானங்கள் அமெரிக்காவிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டிருக்கின்றன. 330 லக்ஷம் டாலர்கள் பெறுமானமுள்ள விமானங்கள் பிரான்ஸ் வாங்கியிருக்கிறது.

## 70 ஆயிரம் அபேஸ் செய்த சாமியார்

டோல்பூரில் ஒரு ரிட்டயர்டு ரயில்வே அதிகாரி தன் ஆயுட்காலத்தில் 70 ஆயிரம் ரூபாய் சேர்த்து வைத்திருந்தார். இவருக்குக் குழந்தையில்லை. ஆனால் எப்படியாவது குழந்தை பிறக்கவேண்டுமென ஆசை. ஒரு நாள் இரு சிஷ்யர்களுடன் ஒரு சாது பிச்சைக்கு வந்தார். அவரை உபசரித்து தன்குறையைச் சொன்னார். அதை தீர்த்துவிடலாமெனச் சொல்லிய சாது மூன்று தினங்கள் அங்கு தங்கினார். மூன்றாம் நாள் சாதுவையும் சிஷ்யர்களையும் 50 ஆயிரம் பணத்தையும் 20 ஆயிரம் பெறுமான நகைகளையும் காணவில்லை. இரும்புப் பெட்டிமட்டும் உடைந்து கிடந்தது.

## இந்தியாவில் விமானவசதிகள் பெருக்க

பம்பாய், கல்கத்தா, சென்னை இவற்றைச் சேர்ந்த பிரதேசங்களில் இப்பொழுது விமான வசதிகள் குறைவாகயிருப்பதால் அவற்றைப் பெருக்குவது சம்பந்தமாகத் திட்டங்கள் தயாரிக்கப்பட்டுவருகின்றன. இன்னும் 7 வருஷங்களுக்கு வருஷந்தோறும் 25 லட்சம் ரூபாய் வீதம் செலவிடப்படும்.

## 6 வயது சிறுவனின் அதிசயசக்தி

வடகன்னட ஜில்லாவில் கார்வார் என்ற கிராமத்தில் ஆறு வயது சிறுவன் ஒருவன் ஷேக்ஸ்பியரின் நாடகங்களை அப்படியே ஒப்புவிக்கிறானாம். சரித்திர சம்பந்தமான சம்பவங்களின் தேதிகளைத் திட்டமாகச் சொல்லிவிடுகிறானாம். சர்வதேச விஷயங்களைப் பற்றி விவாதிக்கிறானாம். பிரஞ்சு, ஹிந்தி, தெலு, மாராத்தி முதலிய பல பாஷைகளை அவன் தெரிந்திருக்கிறானாம். தான் எம். ஏ. பரீக்ஷையில் முன்னமே தேறிவிட்டதாகவும் ஏதாவது உத்யோகம் வேண்டுமெனவும் அவன் கேட்கிறான்.



## ரேடியோ பிரசுரம்

இந்தியக் கவர்ன்மெண்டு, ரேடியோப் பிரசுரங்களினால் நஷ்டமடைந்துகொண்டிருந்தது. அது இப்பொழுது குறைந்திருக்கிறது. 1,17,000 ரூபாய் நஷ்டமேற்பட்டது. இப்போது 117,00ரூபாய்காகக் குறைந்திருக்கிறது. சீக்கிரத்தில் நஷ்டமேயில்லாமல் நடக்கவும் இடமேற்படுமாம்.

## மேமாதம் முடிவில் கா-காரியக் கமிட்டி

காங்கிரஸ் காரியக் கமிட்டியின் அடுத்த கூட்டம் மே மாதம் 4-வது வாரத்தில்நடக்குமென்றும்சத்யாகிரக ஏற்பாடுகள் திருப்திகரமாக நடந்து வருவதாகவும் மகாத்மா உத்தரவு போட்டதும் சத்யாக்கிரக இயக்கம் ஆரம்பமாகுமென்றும் ஆசார்ய கிருபாலினி அறிவிக்கிறார்.

## சென்னை மாகாணத்தில் மதுபானம்

1938 முதல் 1940 வரையில் எடுக்கப்பட்ட புள்ளிவிபரங்களிலிருந்து சென்னை மாகாணத்தில் 100 பேர்களுக்கு 2.4 காலன் வீதம் உள்நாட்டுச் சாராயம் உபயோகிக்கப்பட்டிருக்கிறதாம். உள்நாட்டுச் சாராயத்தைக் காட்டிலும் சென்னை மாகாணத்தில் 1½ பங்குக்கும் அதிகமாகக் கள்ளு உபயோகிக்கப்பட்டிருக்கிறதாம். 1938-39 வருஷத்தில் சென்னை மாகாணத்தில் முனிஸிபல் சம்பந்தமான பிரதேசங்களில் குடி சம்பந்தமாகத் தண்டிக்கப்பட்டவர்கள் தொகை 8,065.

## கற்கண்டு காய்க்கும் மரம்

காராச்சிக்குச் சமீபம் ஓரிடத்தில் கற்கண்டு காய்க்கும் மரம் ஒன்றிருக்கிறதாம். பல்லாயிரக் கணக்கான சிந்திகள் இம்மரத்தை தெய்வமாக வணங்கிவருகிறார்கள். வருஷத்திற்கு ஒருமுறை அந்த மரத்திற்கருகில் பெரிய திருவிழா நடக்கிறது. அது பொழுது அந்த மரத்திலுள்ள பழங்களில் கற்கண்டுக் கட்டிகள் காணப்படுகின்றன. இந்த மரத்தடியில் முன்னால் ஒரு சாது குடிசைகட்டி வசித்து வந்தாராம். இங்கு ஜனங்கள் கோவில் கட்டி வணங்கி வருகிறார்கள். அந்த மரத்திலுள்ள கற்கண்டுகள் சகல ரோகங்களையும் நிவர்த்திக்கும் விடுமென நம்பப்படுகிறது.

## மனமிருந்தால் பிரிட்டன்வழி சொல்லட்டும்

இந்திய அரசியல் நிர்ணயப்பிரச்னை பற்றி பூர்வாங்கமான ஒப்பந்தம் காண ஒரு கமிட்டி கூட்டவேண்டுமென பேசனே சம்பந்தமாக காமன்ஸ் சபையில் கேள்விகளுக்கு உதவி இந்தியா மந்திரி ஸர். ஹியூ ஓ நீல் சொன்ன பதிலைப்பற்றி மகாத்மா காந்தி பின்வருமாறு பத்திரிகை நிருபரிடம் தெரிவித்திருக்கிறார்:—

"எனது நிலைமை முற்றிலும் தெளிவானதாகும். தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவர்கள் அடங்கிய பூர்வாங்க மகாநாடு கூட்டிவைக்கவேண்டியது பிரிட்டிஷ் சர்க்காரே. அவர்கள்தான் அதைக் கூட்டி வைக்கவேண்டும். அதிகாரத்தை இந்திய மக்களின் கைக்கு மாற்றவேண்டியதே யென்றும் இந்திய சுதந்திர சாஸனத்தை நிர்ணயிக்கும் உரிமை இந்தியாவுக்கே என்பதை அங்கீகரிக்கவேண்டியதே யென்றும் பிரிட்டிஷ் சர்க்கார் தம் மனதில் உறுதியான முடிவுக்கு வந்து விட்டால் மேலே சொன்ன பூர்வாங்க மகாநாட்டைத் தடையின்றி கூட்டுவார்கள். அதோடு அதற்கான வழிமுறைகளையும் கண்டு பிடித்துவிடுவார்கள்."

## சாந்தாராம் சென்னை விஜயம்

இந்தியாவிலேயே சிறந்த சினிமா டயரக்டரும் பிரபாத் ஸ்டூடியோவின் பங்குதாரருமான ஸ்ரீ சாந்தாராம் சென்னைக்கு 'பிரபாத் தியேட்டர்' திறப்பு சம்பந்தமாக வரப்போகிறார்.

## 'அரசியல் நிர்ணய சபைதான் முடிவான மார்க்கம்'

லண்டனுக்கு ஜவஹர் கடிதம்

இந்திய அரசியல் நிலைமையைப் பற்றி ஓர் அறிக்கை அனுப்புமாறு ஸ்ரீ எல். எல். எல்ம்ஹாஸ்ட் கேட்டுக் கொண்டதின் பேரில் ஸ்ரீ ஜவஹர் ஓர் அறிக்கை அனுப்பினர். அதில் அவர் குறிப்பிட்டதாவது:-

பிரிட்டிஷ் சர்க்காரின் யுத்தலக்ஷியம் என்னவென்பதைச் சொல்லவேண்டுமென்றும், அரசியல் நிர்ணயசபைக் கோரிக்கையை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்றும் காங்கிரஸ் கேட்டிருக்கிறது. தங்கள் விஷயங்களைத் தாங்களே முடிவு செய்துகொள்ளும் உரிமையுடையவர்கள் இந்தியர்கள் என்று அங்கீகரிக்க வேண்டும். பிரிட்டனுடன் நம் உறவுகள் எப்படியிருக்க வேண்டுமென்பதை, அரசியல் நிர்ணய சபைதான் முடிவாகத் தீர்மானிக்க வேண்டும். மைனரிட்டிகள் சம்பந்தப்பட்ட வரையில் மதம், கலாசாரம் பாஷை ஆகியவைகளிலும் அரசியல மைப்பு தயாரிப்பதிலும் கூட பூர்ண உத்தரவாதம் கொடுக்கத் தயாராயிருக்கிறோம். முஸ்லீம்கள் சம்பந்தப்பட்ட வரையில், அவர்களை ஒரு மைனரிட்டி என்று சொல்வது தவறு. இந்தியாவில் ஐந்து மாகாணங்களில் அவர்கள் மெஜாரிட்டியாகயிருக்கிறார்கள். இந்தியாவில் ஹிந்துக்களோ முஸ்லீம்களோ ஒருவர் மீதொருவர் ஆதிக்கம்செலுத்த முடியுமென்பது சாத்யமில்லை. சர்வ ஜன வோட்டுரிமையை அடிப்படையாகக் கொண்டு அரசியல் நிர்ணய சபையை தேர்ந்தெடுக்க வேண்டுமென்று சொல்லியிருக்கிறோம். இது மிகவும் முக்கியமானதாகும். என்னென்றால் இதனாலேயே வகுப்புப் பிரச்னை நீக்கப்படும்.



சமஸ்தானாதிபதிகள் சம்பந்தப்பட்ட வரையில் பிரிட்டிஷ் சர்க்கார் சொன்னால் அவர்கள் தங்கள் சமஸ்தானங்களில், ஜனநாயக ஆட்சி ஏற்படுத்துவதைத் தவிர வேறுவழியில்லையென ஸ்ரீ எல்ம்ஹாஸ்ட் சொல்வதை நான் ஒப்புக்கொள்கிறேன். இந்தியாவிலுள்ள இதர பாகங்களைப்போல, ஜனநாயக முறையில் எந்த சமஸ்தானமும் அரசியல் நிர்ணயசபையில் கலந்துகொள்ளலாமென விதித்துவிட வேண்டும். சமீப வருஷங்களில் சமஸ்தானாதிபதிகள் விஷயத்தில், சர்க்கார் அனுஷ்டித்து வந்திருக்கும் கொள்கை மிகவும் ஆட்சேபிக்கத் தக்கது. சமஸ்தானங்களிலுள்ள சகல பிற்போக்கான காரியங்களையும், அடக்குமுறைகளையும் சர்க்கார் ஆதரித்து வந்திருக்கிறார்கள். ஆகவே சமஸ்தானாதிபகளுடன் நமக்குள்ள தகராறுகள்கூட கடைசியில் பார்க்கப்போனால் பிரிட்டிஷ் சர்க்காருடன்தான்.

யுத்தம் ஏகாத்பத்ய நோக்கங்களுடன் நடத்தப்படுகிறதென்ற எண்ணம் நாளுக்கு நாள் எங்களுக்கு அதிகமாய்க் கொண்டு வருகிறது. வேறு நல்ல காரியத்திற்காக யுத்தம் நடத்தப்படுகிறதென்பதை தெளிவாக்கப்பட்டாலொழிய, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தைக் காப்பாற்றுவதற்காக இந்தியா உதவி செய்ய முடியாது.

## ஐக்ய மலாயா நாட்டுக்கோட்டை செட்டியார்கள் வர்த்தக சங்கம்

★

கோலாலம்பூர்

24-3-40உ திங்கட்கிழமை ஐக்கிய மலாயா நாட்டுக் கோட்டைச் செட்டியார்கள் வர்த்தக சங்கத்தின் 9-வது ஆண்டுவிழா தலைவர் சிரம்பான் ஸ்ரீ உ. ராம. உ. மு. சுப.முத்தையா செட்டியார் தலைமையில் நடைபெற்றது. விழாவிற்கு 112 அங்கத்தினர்களும் மற்றும் பல பிரமுகர்களும் விஜயஞ் செய்திருந்தார்கள்.

காரியதரிசி ஸ்ரீ வெ. ராமசாமி செட்டியார் தலைவருக்கு மலர் மாலை அணிவித்து பல சகோதர சங்கங்களிலிருந்து வந்த வாழ்த்துக் கடிதங்களைப் படித்தார். பின்னர் 9-வது ஆண்டு அறிக்கை வாசிக்கப்பட்டு அங்கீகரிக்கப்பட்டது.

தலைவர் குறிப்பிட்டதாவது:- அறிக்கையில் தற்கால நிலைமையை ஒருவாறு விளக்கியிருப்பதால், இன்றைய நிலைமையில் முக்கியமாக இரண்டு பிரச்னைகள் நமது குழப்பத்திற்குக் காரணமாயிருக்கின்றன. மற்றவர்களைக் காட்டிலும் நம்மவரை அதிகமாகப் பாதிக்கக்கூடிய ஹிந்துப் பொதுக் குடும்பமென்ற ஷரத்தைப் தொழிற் பதிவுச் சட்டத்தில் புகுத்தியிருப்பதும், வருமானவரியைப் பற்றியுமே ஆகும். புதிய ஆண்டில் நாம் இன்னும் சிரத்தையுடன் சங்கக்காரியங்களைக் கவனித்துவரவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

பல தீர்மானங்கள் தீர்மானிக்கப் பட்டபின்னர் புதுவருடத்திற்குக்கீழ்க் கண்ட உத்தியோகஸ்தர்களும், நிர்வாகசபை அங்கத்தினர்களும் தேர்ந்தெடுக்கப் பெற்றார்கள். தலைவர் கோலாலம்பூர் ஸ்ரீ சா. ராம. மு. சித. மு. சுப்பிரமணியன் செட்டியார், உபதலைவர்கள்; டெலுகான்சன் ஸ்ரீ ராம. மெ. ராமசாமி செட்டியார், சிரம்பான் ஸ்ரீ கு. மு. சொ. பழநியப்ப செட்டியார்; காரியதரிசிகள் கோலாலம்பூர் ஸ்ரீமான்கள் நா. சித. ராம. ராமநாதன் செட்டியார், வெ. ராமசாமி செட்டியார்; பொக்கிஷதார், திரு. ராம. முத்துராமன் செட்டியார். மற்றும்நிர்வாகசபை அங்கத்தினர்களும் தேர்ந்தெடுக்கப் பட்டனர்.

சிற்றுண்டிக்குப் பிறகு ஒரு குரூப் போட்டோ எடுக்கப்பெற்றது.

புதிய ஆண்டுத்தலைவர் ஸ்ரீ சா. ராம. மு. சித. மு. சுப்பிரமணியன் செட்டியாருக்கு ஸ்ரீ உ. ராம. உ. மு. சுப. முத்தையா செட்டியார் மாலை அணிவித்தார். புதிய தலைவரும் காரியதரிசியும் நன்றிதெரிவித்துக் கொண்டார்கள்.

பிறகு ஸ்ரீ வெ. ராமசாமி செட்டியார் வந்திருந்த அங்கத்தினர் அனைவருக்கும் ஏனைய அன்பர்களுக்கும் சங்கச் சார்பில் வந்தனத்தைத் தெரிவித்துக் கொண்டபின் விழா முடிவடைந்தது.

—



## சுபாஷ் மீது புகார்

'அமிர்தபஸார்' பத்திரிக்கை சில தினங்களாக சுபாஷ்பாபுவை தாக்கி எழுதி வருவதால் அப் பத்திரிகை கூறும் புகார்களை பொதுக் கூட்டத்தில் ருஜுப்படுத்த வேண்டுமென சுபாஷ் பாபு கேட்டார். அதற்கு பத்திரிகை மூலமே தான் பதில் சொல்வதாக கூறி சிலதினங்களுக்குமுன் ஸ்ரீ. பஸ்லுக் ஹக்குடன் சுபாஷ் சகோதரர்கள் ரகசியமாக பேசியதாகவும் மந்திரிசபையில் தாங்கள் குறிப்பிடும் ஹிந்துக்களைச் சேர்க்கும்படி கேட்டதாகவும்அப்படிச் செய்தால் மந்திரிசபையை ஆதரிப்பதாகச் சொன்னதாகவும் இதைப் பற்றிக் கவனிப்பதாக ஹக் வாக்குறுதி கூறியதாகவும் ஆசிரியர் பத்திரிகையில் எழுதியிருக்கிறார்.

—

## நார்வேயின் ஜனத் தொகையும் ராணுவபலமும்

நார்வேயின் விஸ்தீர்ணம் 12, 45, 564 சதுர மைல்கள். மொத்த ஜனத்தொகை 29,07,000. இதில் ஆண்கள் 13,71,919. ஒஸலோ, பெர்ஜன், டிரோனுத்ஜம் ஆகியவை நார்வேயின் முக்கிய நகரங்களாகும். இவைகளின் ஜனத்தொகை முறையே 2,53,124-ம் 98,303-ம் 53,458-ம் ஆகும். நார்வேக்குள்ள தீவுகளில் மிகப் பெரிது ஹிண்டோ. இதன் விஸ்தீர்ணம் 850 சதுரமைல். தேசமக்கள் யாவருக்கும் கட்டாய ராணுவப்பயிற்சி அளிக்கப்படுகிறது. ராணுவத்தில் சேருபவர்கள் 18 வயது முதல் 55 வயது வரையில் சேவை செய்யவேண்டும். 1938-ல் நர்வேயின் ராணுவத்தில் 14,400 பேர்களிருந்தார்கள். ஆறு படைகளாகப் பிரிக்கப்பட்ட இந்த ராணுவத்தின் அதிகாரிகள் 1135 பேர் கமிஷன் பெறாத அதிகாரிகள் 765பேர் யுத்தகாலத்தில் கட்டாயமாக ராணுவத்திற்கு அழைக்கப்பட்டு விடுவாராகில் நார்வேயின் படையில் 18,055 பேர்கள் சேர வேண்டிய வர்களாவார்கள். கடலையடுத்து பல கோட்டைகளுமிருக்கின்றன.

—

## நியூ கார்டியன் ஆப் இந்தியா இன்ஷூரன்ஸ் கம்பெனி லிமிடெட்

### முக்கிய மாற்றம்

உயர் திருவாளர் எம். ஸி. டி. எம். சிதம்பரம் செட்டியார் நியூ கார்டியன் ஆப் இந்தியா இன்ஷூரன்ஸ் கம்பெனி லிமிடெட்டின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அன்னர் தலைமையிலுள்ள போர்டின்மூலம் இக்கம்பெனி அபிவிருத்தியும் முன்னேற்றமும் அடைய பாடுபடும் என்பது திண்ணம். முன் இக்கம்பெனியின் மானேஜிங் ஏஜெண்டுகளாயிருந்த இந்தியா அண்டர் ரைட்டர் லிமிடெட்டர்கள் தாங்களாகவே தங்கள் பதவியை ராஜிநாமாச் செய்துவிட்டார்கள். கம்பெனி புதிய டைரக்டர்களின் கையில் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. இவர்கள் கம்பெனியின் நலனையும் அபிவிருத்தியையும் கருதி பல முறைகளில் ஊக்கத்துடன் உழைப்பார்கள்.

—

## புதுமாதிரி சர்க்கா

எட்டு மணி நேரத்தில் ஒரு சேர் பருத்தியைக்கொட்டி, நூற்றுவிடக் கூடிய புதிய திணுசான சர்க்காவொன்றை ஸ்ரீ ஹம்ஸராஜ் என்பவர் கண்டுபிடித்திருக்கிறார். இதன் விலை 15 ரூபாய். ஸ்ரீ ஹம்ஸராஜ் வார்தாவுக்குச்சென்று மகாத்மாவிடம் இந்ராட்டையில் நூல் நூற்று காட்டப் போகிறாராம்.

—



7—5—40 காலை வெள்ளையன் ஊருணியிலிருந்து ஊர்வலமாக காரில் அலங்கரிக்கப்பட்ட ரதத்தில் தலைவர் பவனிவந்தார். தொண்டர்களும் சொர்ணமூர்த்தி பாடசாலை மாணக்கர்களும் தேசியக் கொடிகளுடன் ஊர்வலத்தில் கலந்துகொண்டார்கள். இரண்டு குதிரைகளில் இரண்டு தொண்டர்கள் முறையே தேசிய மூவர்ணக் கொடியையும் அபேதவாத கொடியையும் தாங்கிவந்தார்கள். வாத்திய கோஷமும் பாண்டு முழக்கமும் வந்தேமாதர ஒலியும் வானைப் பிளந்தன. பந்தலில் பாரதி வாக்கியங்கள் பொறிக்கப்பட்ட அட்டைகள் தொங்கவிடப்பட்டிருந்தன. ஊர்வலம் மகாநாட்டுப் பந்தலையடைந்ததும் ஸ்ரீமதி தாயம்மாள் பந்தலுக்கு முன் தேசீயக் கொடியை ஏற்றுவித்தார். அவர் பேசுகையில் கொடியின் தத்துவத்தையும் கொடியின் லக்ஷியத்திற்காக உயிர் துறந்த திருப்பூர் குமாரஸ்வாமியின் வீரத்தையும் மகாத்மாவின் கட்டளைப்படி தேசிய மூவர்ணக்கொடியின் கீழ் எல்லோரும் ஜாதிமத பேதமில்லாமல் ஆரம்பிக்கப்போகும் போரில் கலந்து கொள்ளவேண்டுமென்றும் குறிப்பிட்டார். பாரதத்திலிருந்து பல அரிய மேற்கோட்களையும் எடுத்துக்காட்டினார்.

வரவேற்புக்கழகத் தலைவரான ஸ்ரீ எம் ஜி. முகுந்தராஜய்யங்கார் பேசுகையில் குறிப்பிட்டதாவது:—

இதுவரை இராமனாதபுரம், காரைக்குடி என்ற இரண்டு காங்கிரஸ் ஜில்லாக்களிருந்தன. இவ்விரண்டும் சமீபத்தில் ஐக்யப்படுத்தப்பட்டுவிட்டன. அதன்பின் இதுவே முதலாவது நடக்கும் மகாநாடு.

"ராம்காரில் காங்கிரஸ் நிறைவேற்றிய தீர்மானங்களை கிராமங்கள்தோறும் தெளிவுபடுத்துவதற்கும், அவற்றை அநுஷ்டானத்திற்குக் கொண்டு வருவதற்கும், எல்லா வகுப்பினர்களுடைய உதவியைப் பெறுவதற்கும் நாம் என்னசெய்யவேண்டுமென்று யோசித்து முடிவு செய்வதே இம் மகாநாட்டின் முக்கிய நோக்கம். சுதந்திரம், ஜனநாயகம், தேசீய ஒற்றுமை, சமத்வம், இவற்றை அடிப்படையாகக்கொண்டே இந்தியாவில் அரசியல் அமைப்பு இருக்கவேண்டும். பூர்ண முன்னேற்றமடைவதற்கு எல்லா வகுப்பினர்களுக்கும் சம உரிமையும், உத்தரவாதமும் அளிக்கப் படவேண்டும். சமஸ்தானங்கள் உள்பட அகில இந்தியாவிலும் ஆதிபத்தியம் பொதுமக்களிடம்தான் இருக்க வேண்டும். சுய நிர்ணய சபையால் தான் எல்லாப் பிரச்னைகளும் தீர்க்கப் படவேண்டும்- இதில் சிறுபான்மை வகுப்பினரின் நலன்களுக்கும் உரிமைகளுக்கும் பரிபூர்ண உத்தரவாதம் அளிக்கவேண்டும். இக் கோரிக்கையைப் பிரிட்டன் ஒப்புக்கொள்ளாத பக்ஷத்தில் சட்டமறுப்பை ஆரம்பிக்க வேண்டும்."

"ஜனப் ஜின்னு, அம்பேத்கார் எம். ஸி. ராஜா ஆகியோர்கள் காங்கிரஸ்க் கோரிக்கையை எதிர்ப்பது துக்ககரமானதேயாகும். பிரிட்டிஷ் சர்க்கார் கொடுத்துவரும் செல்வாக்கினால் ஜீவ்ய பிண்டமான தாய்நாட்டை வெட்ட ஈரமின்றி சொல்லத் துணிந்துவிட்டார்கள். பல நகரங்களிலும் கிராமங்களிலும் முஸ்லீம் மக்கள்கூடி ஜின்னாவைக் கண்டித்திருக்கிறார்கள். பிரிட்டிஷ் அரசாங்கத்தின் வாக்கு ஜாலங்களுக்கும் மிரட்டல்களுக்கும் நாம் மதிப்புக்கொடுத்த காலம் போய்

தேவகோட்டையில் நடைபெற்ற

## இராமனாதபுரம் ஜில்லா :: :: :: :: :: அரசியல் மகாநாடு

### ஸர்தார் வேதரத்னத்தின் தலைமையுரை

### மகாத்மாவை பின்பற்றுவதே மாந்தரின் கடமை

விட்டது. ஏகாதிபத்ய நோக்கத்துடனே பிரிட்டன் இந்த யுத்தத்தில் இறங்கியிருக்கிறதென்றும், ஜெர்மனி நடத்தும் யுத்தத்துக்கும் இதற்கும் வேற்றுமையில்லையென்றும் சொல்லி விட்டால் பிரிட்டனுக்கு ரோஷமும் கோபமும் மூளுகின்றன.

காங்கிரஸ் நிர்மாணிக்க விரும்பும் அரசியல் தீர்க்கதரிசனத்துடன் சத்தியம், அஹிம்ஸை இரண்டையும் அடிப்படையாகக் கொண்டது. காந்திஜியின் கட்டளைப்படி சத்தியாகிரகக் கமிட்டிகள் அமைக்கப்படுகின்றன. நேர்மையும, கட்டுப்பாடும் மனவுறுதியும் படைத்த சத்தியாகிரகசைன்யம் நாடெங்கும் திரண்டுஎழுகின்றது. எல்லோரும் படைத்தலைவரின் உத்தரவை எதிர் நோக்கி நிற்கின்றனர், நமக்கு வழிகாட்ட மகாத்மா ஜோதியாக விளங்குகிறார். நாம் அடையும் வெற்றி பொதுவானதாகும் அதனால் உலகில் புதுசகாப்தம தோன்றும்."

ஸ்ரீ ஜனப் எம். ஏ. ரஹீம் மகாநாட்டைத் திறந்துவைத்து வீரம் ததும்பும் சொற்பொழிவு நிகழ்த்தினர் அவர் குறிப்பிட்டதாவது:—

ஹிந்துக்களும் முஸ்லீம்களும் ஒற்றுமைப்பட்டு சுயராஜ்யம் பெறுவதைத்தவிர இரு சாராருக்கும் வேறு மார்க்கமேயில்லை. தனித்தனி தேசங்களைக் கேட்பது பேடித்தனமாகும். முஸ்லீம் மெஜாரிட்டியுள்ள மாகாணங்களுக்கு மைனரிட்டி முஸ்லீம்களை குடியேற அழைக்கும் ஜின்னாவின் போக்கு வேடிக்கையாகவேயிருக்கிறது. ஜின்னாவும் ஈ வே. ராமஸ்வாமி நாயக்கரும் சேர்ந்து பிரிவினைத் திட்டம் போடுவது தலையும் எலியுத் கூடிய கதையைப்போலிருக்கிறது. இவர்களுடைய செய்கையை நாட்டு மக்கள் கண்டிக்கிறார்கள். சுமார் 70,000 முஸ்லீம்கள் கூடி அஸாத் மகாநாட்டில் செய்த தீர்மானங்களில் காங்கிரஸ் மணம் கமழுகின்றது; தேசியவாசம் ததும்புகிறது; ஹிந்து முஸ்லீம் ஒற்றுமை ஒலிக்கிறது-லீக்கில் உள்ளவர்களைக்காட்டிலும் அஸாத் மகாநாட்டில் கலந்துகொண்ட முஸ்லீம்கள் மதபக்தியிலும் தேசபக்தியிலும் குறைந்தவர்களல்ல. ஸபாரில் நடைபெற்ற மகாநாட்டில் வங்கப்புலி ஹக் காங்கிரஸில் 1500 முஸ்லீம்கள் தானிருக்கிறார்களென்று சொன்னது பொறுப்பற்ற பேச்சாகும். டில்லி தேசிய முஸ்லீம் மகாநாட்டுக்குப் பின்னரும் இம்மாதிரி புலம்புவதில் மதிப்பில்லை. பாக்ஸ்தான் திட்டம் பயனற்றது. இதை ஜின்னா கோஷ்டியாரே நாளடைவில் கைவிட்டு விடுவார்கள்-தேசியஉணர்ச்சியுள்ள தமிழ்நாட்டு முஸ்லீம்கள் ஆயிரக்கணக்காக காங்கிரஸில் சேர்ந்து போராடவேண்டுமெனக் கேட்டுக் கொள்கிறேன். முஸ்லிம்லீக் தேர்தலில் நின்று பார்க்கட்டும். ஏன் அஞ்சுகிறார்கள்? பொது மக்களுக்கு அவர்களிடம் நம்பிக்கையில்லை. தனித்தொகுதி நீக்கப்பட்டால்தான் ஹிந்து முஸ்லிம் ஒற்றுமை ஏற்படும் முஸ்லீம்கள் ஹிந்துக்களிடமும், ஹிந்துக்கள் முஸ்லீம்களிடமும் வோட்டுகள் பெற வேண்டும். மதசம்பந்தமான அச்சத்திற்கு காங்கிரஸில் இடமில்லை. காங்கிரஸ் கோருவது பரிபூர்ண சுயேச்சை; காந்திஜியின் கட்டளைப் படி போராட்டத்துக்கு தயாராகும் படிக்கேட்டுக் கொள்கிறேன்"

### தலைவரின் அரியவுரை

தலைவர் ஸர்தார் வேதரத்னம் தமது உரையில் குறிப்பிட்டதாவது:—

"இம்மகாநாடு நெருக்கடியான சமயத்தில் நடக்கிறது. இது சத்யாகிரகத்துக்குத் தயாராகும் சந்தர்ப்பம். இன்று கடும் வெயிலில் தொண்டர்கள் அணிவகுத்துச் சென்றதும் முக்கியமாக சிறுமிகள் தேசிய கீதங்கள் பாடியதும் எதிர்பார்க்கும் சத்யாகிரகப்போருக்கு ஒரு பரீக்ஷை நடத்திவிட்டதாக முடிவு செய்துவிட்டேன். இதிலிருந்து எவ்வித தியாகங்களையும் தொண்டர்கள் ஏற்றுக்கொள்வார்களென்று அறிந்துகொண்டேன். தேசிய பாடசாலைகள் நிறுவி இச்சிறுமிகளை தேச சேவிகளாக ஆக்க-முன்வந்த பெரியார்களைப் பாராட்டுகிறேன். கிராமங்கள் தோறும் இதுபோல தேசிய பாடசாலைகள் ஏற்படவேண்டும்."

"நமது நாட்டில் தாய்மார்கள் குழந்தைகளை வீரர்களாக ஆக்கவேண்டும். பூச்சாண்டியின் பெயரைச் சொல்லி பயங்காட்டக்கூடாது. கெட்ட வார்த்தைகளைக் கற்றுக்கொடுத்து எதிர்கால வாழ்க்கையைக் கெடுத்துவிடக் கூடாது. சிறு வயதிலேயே கல்யாண ஞாபகம் ஊட்டுவது பெரும் பிசகு. வீரர் சரிதங்களும் தேசிய பாடல்களும் கற்றுக்கொடுக்கவேண்டும். நல்ல முறையில் வளர்க்கவேண்டும்"

"ராஜினமா செய்த நமது மந்திரிகளைச் சிலர் குறைகூறுகிறார்கள்; அவர்கள் பதவியேற்கும் முன்னர் கவர்னர் விசேஷாதிகாரம் செலுத்தக்கூடாது

(8-ம் பக்கம் பார்க்க)

# ஊழியன்

பொங்குபுகழ்ப் பாரதத்தாய் பொருந்தமணி முடிபுனைந்து புலவர் போற்றச்
சிங்கஅணை மீதிருந்து தனியரசு செலுத்தியுயர் செங்கோல் தாங்கி
எங்குமொளி வீசஅறம் யாவுநனி வளர்ந்தோங்க இடொன் றில்லா
எங்கள்தமிழ் இனியநறும் மணம்மலர ஊழியமே ஏற்றிட் டேனுல்

விக்கிரம-ஸு சித்திரை-மீ 27உ (9—5—40) வியாழன்

## கணக்குப் பரிசோதகர் சர்வாதிகாரியா?

செங்கற்பட்டு ஜில்லா ஜட்ஜ் ஸ்ரீ பி. என். இராமசாமி ஐ. சி. எஸ். இந்த மே மீ 4-ந்தேதியன்று ஸ்தலஸ்தாபன சம்பந்தப்பட்ட ஒரு வழக்கில் அருமையான தீர்ப்பு ஒன்று அளித்திருக்கிறார். அத் தீர்ப்பு ஸ்தலஸ்தாபன சம்பந்தப்பட்ட எல்லோருடைய கவனத்தையும் இர்க்கவல்லது. காஞ்சீவரம் முனிசிபாலிடி சம்பந்தமான வழக்கு அது. காஞ்சி நகரசபை சில குறைந்த டெண்டர்களைத் தள்ளிவிட்டுக் கூடுதலான அளவுள்ள டெண் டர்களை ஏற்றுக்கொண்டதாம். இது பிசகு என்றும் இதனல் கவுன்சிலுக்கு ஏற்பட்ட நஷ்டத்தை அதற்குக்காரணராக இருந்த அங்கத்தவர் கொடுக்கவேண்டும் என்றும் அரசாங்கக் கணக்குப் பரிசோதகர் (கவர்ண்மெண்டு ஆடிட்டர்) சர்சார்ஜ் செய்துவிட்டாராம். சர்சார்ஜ்க்கு உட்பட்ட கவுன்சிலர்கள் வழக்குத் தொடுத்தனர். ஜில்லா நீதிபதி அங்கத்தினர் கட்சியை ஒப்புக்கொண்டு ஆணித்தரமான தீர்ப்பு ஒன்றைக் கொடுத்தார்.

செங்கற்பட்டு ஜில்லா நீதிபதி திரு. இராமசாமி, ஸ்தல ஸ்தாபன நிலைமைகளை நன்ருக உணர்ந்து தீர்ப்பு நல்கியிருக் கின்ருர். ஸ்தல ஸ்தாபனங்கள் ஜனநாயக சுதந்தர நிலையங் கள் என்று பெயர். பெயர்தான் அப்படி. அது உண்மை யல்ல என்பதை ஸ்தல ஸ்தாபனப் பழக்கமுடையார் அறிவர். நகரசபைகளோ ஜில்லா போர்டுகளோ ஏகோபித்துச் செய்த தீர்மானத்தை, ஒரு ஆடிட்டர், அல்லது ஒரு ஸ்தல ஸ்தாபனங் களின் இன்ஸ்பெக்டர் அன்றி அரசாங்கம் அடிக்கடி ரத்துச் செய்வதைக் காண்கிறேம். 'அப்படிச் செய்யக்கூடாது; புன ராலோசனை செய்யவேண்டும்' என்று சம்பந்தப்பட்ட ஸ்தா பனம் அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ளும். எத்துணைமுறை கேட்டாலும் 'எங்கள் முடிவை மாற்றுவதற்கில்லை' என்ற, கம்பீரமான பதிலைத் தவிர அரசாங்கத்தாரிடமிருந்து வேறு பதிலை எதிர்பார்க்க முடியாது.

முடிவான அதிகாரம் அரங்சாங்கத்தினுடையது. இதில் ஸ்தலஸ்தாபன சுயராஜ்யம் எங்கேயிருக்கிறது? தேர்ந்தெடுக் கப்பெற்ற பிரதிநிதி சபையின் முடிவை ஸ்தலத்துக்கு நெடுந் தூரத்தே வசிக்கும்—ஸ்தல நிலைமையை அறியமுடியாத ஒரு அதிகாரி சட்டென்று மாற்றிவிடுகிருர். மாகாண அரசாங்கம் பெரும்பாலும் அதற்கே ஒப்பம் வைக்கிறது. இந் நிலைமையில் தாக்குண்ட கவுன்சிலர் கோர்ட்டை நாடவேண்டியதாகிறது. கோர்ட்கள் அரசாங்கத்துக்கு விரோதமாக இத்தகைய நல்ல தீர்ப்புக்கள் கொடுப்பது பாராட்டத்தக்கது. இவ் வழக்கில் தீர்ப்பளித்த நீதிபதி, நகரசபை அங்கத்தவர் உரிமையைப் பெரிதும் மதித்ததோடு கணக்குப் பரிசோதகர் செய்கையை அடியோடு வெறுத்திருக்கின்ருர்.

நீதிபதி இராமசாமி ஐ. சி. எஸ், ஆடிட்டரின் சர்சார்ஜ் உத்தரவை ரத்துச் செய்து விட்டார். நகரிலுள்ள டெண்டர் காரர்களை அந்நகரில் வசிப்போர் அறிய முடியுமே தவிரச் சென்னையில் வாழும் ஆடிட்டர் அறியமுடியாதெனக் குறிப் பிடுகிருர் அவர். அது முற்றும் உண்மையல்லவா. குறைந்த டெண்டருக்குக் கொடுக்கவேண்டுவது பொதுவாக முறை யென்ருலும், வேலைசெய்ய முடியாதவர் பொறுப்பின்றி டெண் டரைக் குறைத்துப் போட்டுவிடும் சந்தர்ப்பம் இல்லையென்று சொல்லமுடியுமா? அத்தகைய சந்தர்ப்பங்களில் குறைந்த டெண்டர் என்பதை மட்டும் நோக்கினல் காரியம் நடவாதல் லவா? அப்பொறுப்பு கவுன்சிலுடையதல்லவா? அவ்வாறுன சந்தர்ப்பங்களில்தாம் காஞ்சி நகரசபை குறைந்த டெண்டர் களைத் தள்ளியது என்பதை மறுக்க ஆதாரமில்லையென நீதி பதி கருதியிருக்கிருர்.

கணக்குப் பரிசோதகர் தம்மை ஒரு சர்வாதிகாரியாக நினைத்துக்கொண்டு கவுன்சிலுக்குச் செலுத்தவேண்டிய மதிப் பைச் செலுத்தாமல் அவசியமின்றி சர்சார்ஜ் செய்ததாக நீதி பதி கருதுகிருர் என்பது தீர்ப்பினின்றும் தெளிவாக விளங்கு கிறது. ஸ்தலஸ்தாபனங்களில் ஆங்காங்கு அடிக்கடி ஆடிட் டர் இன்ஸ்பெக்டர் முதலானவர் நடந்துகொள்ளும் முறையை நன்ருக அறிந்துக்கொண்டே நீதிபதி இராமசாமி இவ்வளவு திறம்படத் தீர்ப்பளித்தார் என்று சொல்தல் வேண்டும். தமக்கு அதிகாரம் இருக்கிறது என்பதற்காக அதனைக்காரண மின்றி உபயோகித்து அதிகாரச் செருக்கைக் காட்டுவோருக்கு இன்னேரன்ன தீர்ப்பு நல்ல பாடங்கற்பிக்கும் என்று நம்புவோம்.

## இடி முழக்கம்

### சகோதரச் சண்டை வேண்டாம்

பர்மா வாழ் ஹிந்து-முஸ்லீம்கள் தாங்கள் ஒரே தாய் வயிற்றில் பிறந்த வர் என்பதை மறந்து வகுப்புக் கலகத் தில் இறங்கியிருப்பது துக்ககரமான தாகும். தாய்நாடு விட்டு வெளிநாடு சென்ற பாரத சகோதரர்கள் இம் மாதிரியான விபரீதக்கோலம் கொள் வது அவமானமும் கேடு சூழ்வது மாகும். பர்மா வாழ் இந்தியர்களின் முதாதையர் நீண்ட காலத்திற்கு முன் அந்நாட்டில் குடியேறி தங்களுடைய உழைப்பாலும் முதலீடுகளாலும் அந் நாட்டை தற்கால உன்னத நிலைமைக் குக் கொண்டு வந்தவர்களாவார்கள். இதுகண்டு பிறர் பொருமை கொள்ள லாம். சுரண்டும் எண்ணமுடையவர் இதனல் பிரிவினைக்கு தூபம் போடு வது இயல்பே. முன்னர் பர்மாப் பிரி வினை நன்மை பயப்பது என்று பிரசா ரம் செய்ததோடு அதை பர்மியர் நம் பும் படியும் செய்து பிரிவினையும் நடந் தாய்விட்டது. இப்பொழுது பிரிவினை யால் பல துன்பங்களிருந்து வருவ தை எல்லோரும் தெரிந்துகொண்டார் கள். திரைகடலோடியும் திரவியம் தேட அன்னியநாடு சென்ற இந்தியர் கள் எவ் வகுப்பினராயினும் ஒற்று மையாக வாழ்வதே சால்புடைத்து. கடல்கடந்த இந்தியர்களின் நல்வாழ்க் கையில் சதா நாட்டங்கொண்ட பாரதமக்களின் மனம் இத ஞல் மிகவும் வருத்தமடையுமென்ப தில் எட்டுணையும் ஐயமில்லை. பர்மிய இந்திய சங்கத்தின் ஆதரவில் நடந்த கூட்டமொன்றில் ஜனப் முஸாமால், ஹிந்துக்களில் சிலர் பொங் கிகளுக்கு ஆதரவு அளித்ததாகவும் இந்தியாவிலுள்ள அரசியல் வேற் றுமையுணர்ச்சி பர்மாவிலும் பரந்து விட்டதாகவும் கூறினர். முதலாவது அவர் சொன்னது ஏற்கத்தக்கதல்ல; ஏனென்ருல் கலாகாலத்தில் முஸ்லீம் களைப் போலவே ஹிந்துக்களுக்கும் பலவித கஷ்டநஷ்டங்கள் ஏற்பட்டன. ஆகவே அவர்கள் வீணுக பர்மியர்களு டன் சேர்ந்து தங்கள் தலையிலே மண்ணைவாரிப் போட்டுக்கொள்வார் களா? இரண்டாவது காரணம் உண் மையானுல் அது விசனிக்கத்தக்கதே யாகும். பிறநாடுபோந்த இந்தியர் துன்பமே அனுபவிக்கிருர்கள். இதைப் பற்றி இந்தியத் தலைவர்கள் எப்பொழு தும் சிந்தனை செய்து வருகிருர்கள்; மகாத்மா காந்தி தென்னப்பிரிக்கா வில் அவதிப்பட்டதெல்லாம் இதற்காக வே யென்பதை ஞாபகமூட்ட விரும்பு கிறேம். இதிலிருந்து தாய்நாடு விடு தலையடைவதால் தான் இந்தியர் அனை வருக்கும் நன்மையுண்டு என்று கண்டு கொள்ளலாம். வெளிநாடு போந்த இந் தியருக்கு விடுதலை வேண்டுமென்ருல் தாய்நாடு முதலில் சுதந்திரமடைய வேண்டும். தங்களுக்குள்ளிருக்கும் அற்ப வேற்றுமைகளைக் களைந்து ஒரு முகமாக இந்தியாவின் விடுதலை இயக் கத்தை ஆதரிக்கிறவர்களைத்தாங்கி நிற்க வேண்டுவதே ஏற்புடைத்து எனச் சுட்டிக்காட்ட விரும்புகிறேம்.

### இந்தியாவுக்கு சுதந்திரமளிப்பதே ஏற்றது

ஐரோப்பாவில் வரவர யுத்த நெருக் கடி வலுத்துக்கொண்டே வருகிறது. எங்கு பார்த்தாலும் யுத்தப் புகை குமு றுகிறது; பிரிட்டனும் இந்த நெருக்கடி யில் அதி தீவிரமாக இறங்கிவிட்டது. யுத்த முடிவில் எந்த எந்த நாடு எப்படி எப்படி ஆகுமென எவரும் கூறமுடி யாது என்று டெல்லி "ஸ்டேட்ஸ் மன்" சொல்லுகிறது. இந்த சமயத்தில் இந்தியாவின் பரி பூர்ண ஒத்துழைப்பைப் பிரிட்டன் பெறவேண்டுவது மிகவும் முக்கிய மானதாகும். சென்ற யுத்தத்தில் அயர்லாந்தை திருப்தி செய்யாததி ஞல் அங்கு புரட்சி ஏற்பட்டது. அத ஞல் பிரிட்டனுக்கு மிகுந்த கஷ்ட மேற்பட்டது. ஆனல் அயர்லாந்துக் கும் இந்தியாவுக்கும் எவ்வளவோ வித்தியாசங்கள் உண்டு. இந்திய உதவி மந்திரி, இந்தியாவுக்கு விடுதலை அளிப்பதைப்பற்றி சற்று மந்த சுபா வம் காட்டுவதுபோலத் தோன்றுகி றது. இதனல் இந்தியர்களுக்கிடையே மனவருத்தம் ஏற்பட ஏதுவாயிருக்கி றது.

மகாத்மாகாந்தி, அடிப்படையான விஷயங்களை முடிவு செய்வதற்கு தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவர்களின் கமிட்டியைக் கூட்ட வேண்டுமானல் பிரிட்டீஷ் சர்க்கார்தான் அதைச் செய்ய வேண்டுமென்கிருர். முதலில் தேர்ந்தெடுக்கப் பட்டவர்களாயிருக்க வேண்டும்; இரண்டாவது பிரிட்டீஷ் சர்க்கார் அதைக் கூட்டவேண்டும். இந்த இரண்டும் நடந்தால் தான் தோன்றித் தலைவர்கள் தோன்றவும், வகுப்புச் சுயநல வாதிகள் கண்டபடி பேசவும் இடமிருக்காது. இதை பிரிட் டன் விரைவில் செய்யுமென்பதே நமது நம்பிக்கை.

### ஆமதபாத் ஜில்லா போர்டின் அழகிய தீர்மானம்

ஆமதாபாத் ஜில்லா போர்டு வகுப்பு வாதிகளுக்கு ஓர் அருமையான பாடம் கற்பித்திருக்கிறது. ஹிந்து மகாசபை, முஸ்லிம் லீக் ஆகிய வகுப்பு வாத ஸ்தாபனங்களைச் சேர்ந்தவர் களுக்கு எவ்வித உபசாரமும் செய்யக் கூடாது என்பதே போர்டின் தீர் மானம். பொதுஜனப் பிரதிநிதிகளால் நிர்வாகம் நடத்தும் ஸ்தல ஸ்தாபன மாகிய ஆமதாபாத் ஜில்லா போர்டின் இவ்வித தீர்மானம் போற்றத்தக்கதே. இதனல் வகுப்பு வாதிகளுக்கு நாட்டு மக்களிடம் செல்வாக்கில்லையெனத் தெரிகிறதல்லவா?

## நமது பத்திரிகை ஏஜண்டு

நமது 'ஊழியன்' பத்திரிகைக்கு கோட்டையூர் ஸ்ரீ பெரி. நா. லட்சு மணன் செட்டியாரை ஏஜெண் டாக நியமித்திருக்கிறேம். சந்தாத் தொகைகள் கொடுத்து அவரிடம் ரசீது பெற்றுக்கொள்ளலாம்.



## உள்ளூர்

### நீல விளக்குத் திறப்புவிழா

ஸ்ரீ சுப. சு. அரு. சுப்பய்யா செட் டியார் நன்கொடையால், கீழ ஊருணி பார்க்குக்கு முன்பாக உள்ள ஐந்து வீதிச்சந்தியில் ஒரு நீல விளக்கை 2—5—40 வியாழக்கிழமை மாலை 6-30 மணிக்கு ஸ்ரீ மெ. செ. ராமசாமி செட்டியார் திறந்துவைத் தார். ஸ்ரீ டி. புருஷோத்தம், கூட் டத்திற்கு தலைமை வகித்தார். சேர் மென் ஸ்ரீ ராய. சொக்கலிங்கன் தலை வருக்கும் திறப்பாளருக்கும், நன் கொடையாளருக்கும் மாலைகள் அணி வித்தார். கமிஷனர் ஸ்ரீமான் ஏ. கோபாலகிருஷ்ணன், டாக்டர் எஸ். எஸ். சாரி, டி. புருஷோத்தம், முத லானவர்கள் நன்கொடையாளரைப் பாராட்டிப் பேசிப் பல நீல விளக்கு கள் அமைக்க வேண்டுமென்பதை வற்புறுத்திச் சொன்னர்கள். திறப் பாளர் சிறந்த பதில் அளித்தார். எல் லோருக்கும் சந்தனத்தாம்பூலபுஷ்பம் குளிர்ந்தபானம் வழங்கப்பெற்றது, ஸ்ரீ அபிசீனியா பழ. நாச்சியப்பன் வந்தனேபசாரம் கூறினர்.

### பழய மாணவர் சங்கம்

5—5—40 மாலை 4 மணிக்கு எஸ். எம். எஸ். வித்யாசாலை பழய மாணவர் சங்க ஜெனரல் பாடிக் கூட்டம் பாடசாலை மேல்மாடியில் நடைபெற் றது. முதலாவதாகத் தேநீர் விருந்து அளிக்கப்பெற்றது. கூட்டத்திற்கு ஸ்ரீ வி. ஆராவமுத அய்யங்கார் தலைமை வகித்தார். காரியதரிசி ரிப் போர்ட்டு வாசித்ததில் அபிப்பிராய வித்தியாசங்கள் சிலருக்கு இருந்ததால் அது ஒத்திவைக்கப்பட்டது. ஷை வித்தியாசாலைக்கு சர்க்காரால் அளித்துவந்த அங்கீகாரம் நீக்கப்பட்டி ருப்பதை மீண்டும்பெறும் முயற்சிகளை பழய மாணவ சங்கம் செய்கிறதென் றும் சொல்லப்பட்டது. இதற்காக ஸ்ரீமான்கள் டி. பார்த்தசாரதி அய் யங்கார், ஆறு. ஆ. ராம. சொக்கலிங் கம் செட்டியார், அபிஸீனியா பழ. நாச்சியப்பன், பனை. மெ. மெ. பழ. வெங்கிடாசலம் செட்டியார் எஸ். ராஜாமணி ஆகியோர்களடங்கிய தூது கோஷ்டியும் நியமிக்கப்பெற்றது.

### காரைக்குடி

#### பால்யவிவாக மறுப்புச்சங்கக் காரியதரிசி ஸ்ரீ ராம. அழகப்பாவின் வேண்டுகோள்

வயதுவாரத பால்ய மணங்களை அறவே நடவாமற்செய்ய நமது சங் கம்ரொம்பச் சிரத்தையோடு வேலை செய்துகொண்டிருக்கிற காரணத் தினல் குழந்தை மணங்கள் நடை பெராமலும் வயதுவந்த அநேக ஆட வர்களுக்கு ரொம்ப எளிதாகக் கல்யா ணமாகவும் நேர்ந்துகொண்டிருக் கிறதை யாவரும் அறிவர். சட்டதை மீறிக் கல்யாணஞ் செய்யப்பலர் எண் ணவில்லை. ஒரு சிலர் எப்படி இந்தச் சட்டத்தை மீறலாம் எனறு குறுக்கு வழி தேடுகிருர்களாம். இன்னுஞ்சிலர் பெண்ணுக்கு வயது 13-முடிந்து 14-தொடங்கிவிட்டாலும் ஆணுக்கு வயது 17-முடிந்து. 18-தொடங்கி விட்டாலும் கல்யாணஞ் செய்யலா மென்றும் அப்படிச் செய்வது சட்ட விரோதம் இல்லை யென்றும் தவருக எண்ணி வயதுவாராத குழந்தை களுக்குக் கல்யாணஞ்செய்ய முயலுவ தாகவும் தெரிகிறது. சாரதாச்சட்டப் படி பெண்ணுக்கு வயது 14 பூர்த்தி யான பின்னரும் ஆணுக்கு 18-வயது பூர்த்தியான பின்னருமே கல்யா ணஞ் செய்யவேண்டுமெனத் தெரிவித் துக்கொள்கிறேன். இல்லையேல், சட்ட விரோதம் என்பதையும் சட்டத்தை மீறுவது தடுக்கப்படுமென்பதையும் மறந்து விடக்கூடாது. எனவே யாவரும் சட்டத்தை மீறி கல்யாணஞ் செய்ய முனைந்து சிரமம் அடைய விரும்பாமலிருப்பது நல்லதென்று பெற்றோர்களுக்கு அறிவித்துக் கொள்ளுகிறேன். எங்கேனும். சட்ட விரோதமான கல்யாணங்கள் நடை பெற இருப்பின் சீர்திருத்த அன்பர் கள் காலந்தாழ்த்தாது எங்களுக்கு விபரமாகத் தெரிவிக்கச் செய்து பால்ய விவாகம் அறவே நடவாமற் செய்ய உதவி புரிவார்களாக.

### வரப்பெற்றேம்

காரைக்குடி சித்தவைத்தியப் பிர சார சபையின் ஆர்கனைசர் ஸ்ரீ மாணிக்கவாசகம் பிள்ளையிடமிருந்து போகர் பற்பொடி, போகர் சந்தனதி தைலம், போகர் தாதுபுஷ்டி லேகியம் ஆகியவைகளின் மாதிரிகள் வரப் பெற்றேம்.

### சென்னை ஹைகோர்ட்டு

C. S. 99 of 40.

தேவகோட்டை ஜெமீந்தார் குடும் பத்தைச் சேர்ந்த சோமநாதன் செட்டி யார் வகையரு வாதிகளாகவும், பன் ளத்தூர் திவான்பகதூர் அ. மு. முரு கப்ப செட்டியார் வகையரு பேரில் தொடர்ந்திருந்த வழக்கில் நாளது வரு ஷம் ஏப்ரல்மீ 30உ கனம் ஜஸ்டிஸ் ஜெண்டில் அவர்கள் முன்பாக விசா ரணைக்கு வந்து இருதரப்பு வாதங்களை யும் கேட்டு பிரதிவாதிகளிடம் 'அண் டர்டேக்கிங்' வாங்கிக்கொண்டு பிரதி வாதிகள் வாதிகளுடைய சொத்தை மேல்பார்த்து வந்ததற்கு 30—4—40 முடிய வாதிகளுக்குக்கணக்குக்கொடுக் கும்படியும் கேஸ் முடியும் வரை சொத்துக்களை பிரதிவாதிகள் விற்க வாவது ஏலம் நடத்தவாவது கூடா தென்றும், இப்பொழுது விளம்பரம் செய்யப்பெற்றிருந்த இந்தியா, பர்மா சொத்துக்கள் ஏலத்தை நடத்தக் கூடாதென்றும் உத்திரவு செய்திருக் கிருர்கள். திறந்த கோர்ட்டில் சாக்ஷி களை விசாரிப்பதற்கும் கணக்குகளைப் பற்றி விவாதிப்பதற்கும் வாயிதா நடை பெறுமென்றும், ஒன்ணுவது பிரதி வாதி திவான்பகதூர் முருகப்ப செட் டியார் சாக்ஷியாக விசாரிக்கப்படுவா ரென்றும் தெரிகிறது. (ஒ. நி.)

### இந்துமத பாடசாலை

வாலாஜாபாத் இந்துமத பாடசாலையின் 7-வது ஆண்டுவிழா 5—5—40உ திரு. வி. ராமகிருஷ்ண எம். ஏ. ஐ. வி. எஸ். தலை மையில் நடைபெற்றது. கைக்குத்தல் நெல் அரைப்புக் கூட்டத்தை கோயமுத் தூர் ராவ் பகதூர் அரங்கசாமி நாயுடு திறந்துவைத்து ஒரு கைக்குத்தலரிசி தயாரிக்கும் இயந்திரம் நன்கொடையாக அளிக்க ஒப்புக்கொண்டார். திவான் பகதூர் வி. பாஷ்யம் ஐயங்கார் மாணவர் களுக்கு பரிசுகள் வழங்கினர். பின்னர் சிற்றுண்டி நடைபெற்றுக் கூட்டம் முடி வடைந்தது.

### செய்கோன்

29—3—40உ இந்தோசைன மாஜி உப காரியதரிசி ஸ்ரீ கா. கா. அழகப்ப் செட்டி யார் தாய்நாடு செல்லுவதை முன் னிட்டு ஒரு பிரிவு உபசாரக் கூட்டமும் தேநீர் விருந்தும் சங்கச் சார்பில் தலைவர் ஸ்ரீ வெ வீர. கா. மு. சுப்பையா செட்டி யார் தலைமையில் கொடுக்கப்பெற்று ஒரு போட்டோவும் எடுக்கப்பெற்றது.

7—4—40உ இந்தோ சைனநாட்டுக் கோட்டை செட்டியார்கள் சங்கத்து 10-வது ஆண்டு 3-வது நிர்வாக சபைக் கூட்டம் தலைவர் ஸ்ரீ வெ. வீர. கா. மு. சுப்பையா செட்டியார் தலைமையில் நடை பெற்றது. கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

நமது சமூகத்தார் தர்மத்துக்காகவும், யுத்தத்திற்காகவும், நன்கொடைகள் கொடுத்திருப்பதற்கும், பிரான்ஸ் தேசத் திற்கு அனுதாபங்காட்டி நாம் அறிக்கை யில் கூறியிருக்கும் அன்பு மொழிகளுக் கும் வந்தனம் செலுத்தி எழுதிய மேன்மை தங்கிய இந்தோ சைன கவர் னர்ஜனரவின் 12—3—40உ கடிதம் ரிக் கார்டு செய்து கொள்ளப்பட்டது.

மே. 20, 21-ல் நடக்கவிருக்கும் பின்னை கள் வார மகாசபைக்கு நமது பிரதிநிதி களாக ஸ்ரீ வெ. வீர. கா. முத்தையா செட்டியாரையும், ஸ்ரீ நா. மா. அழகப்ப செட்டியாரையும் அனுப்பத் தீர்மானிக்கப் பெற்றது.

90 நாள் தவணைக் கணக்குக்கு கடன் வாங்கியிருப்பவர்கள் ஒரு தவணைக்கோ பல தவணைகளுக்கோ, வருஷத்துக்கொரு முறையோ, பல வருஷங்களுக்கொரு ஒரு முறையோ வட்டிச்சிட்டை கொடுப்பது வழக்கம். வட்டிச்சிட்டையில் கடன் வாங்கியிருப்பவர் கையெழுத்துச் செய் வது வழக்கமில்லை என்று அவுக்கா ரெவெய் 5—4—40 ல்எழுதிய கடிதத்திற் குப்பதில் எழுதத் தீர்மானிக்கப் பெற்றது.

நெற்குப்பை:—இவ்வூர் கிராமக் காங் கிரஸ் கமிட்டி சத்தியாக்கிரகக் கமிட்டி யாக இன்னும் மாற்றப்படவில்லை யாயினும் ஸ்ரீமான்கள் அழ. விஸ்வநாதன், கா. கிருஷ்ணமூர்த்தி, (கிராமக் காங்கிரஸ் கமிட்டி மெம்பர்) சுப்பிரமணிய அய்யர், ராம. மாயாண்டி அம்பலம், கரு. சி. கருப் பையா அம்பலம், பி. முத்துகிருஷ்ணன், ஜி. பி. சுப்ரமணியன், ந. மு. பெரி. சுப்பய்யாத் தேவர், ந. மு. சி. சின்னய்யா தேவர், ச. பெ. ராம. கருப்பையாத் தேவர், பெரி. முத்துராமன், க. நா. சுப் பிரமணிய அய்யர், முரு. ஒ. நடராஜன் செட்டியார் ஆகியோர்கள் சத்தியாக்கிர கக் பிரதிக்ஞையில் கையெழுத்திட்டிருப்ப தாக ஸ்ரீ அழ. விஸ்வநாதன் அறிவிக்கிருர்.

7—5—40 காலை 4 மணிக்கு ஸ்ரீ கும. அ. அண்ணுமலை செட்டியார் அவர்கள் தலைமையில் கூடி நூல்நூற்போர்சங்கம் இவ்வூர் கிழக்கூட்டத்தில் ஸ்தாபிக்கப் பட்டு மேற்படி சங்கத்திற்கு திருவாளர் முத்தழகு அம்பலம், அழ. விஸ்வநாதன் ராம. சொக்கலிங்கம், மு. இராமலிங்கம் பிள்ளை, ஆகியோர்கள் முறையே தலைவ ராகவும் உப தலைவராகவும் காரியதரிசி யாகவும் பொக்கிஷத்தாராகவும் தேர் தெடுக்கப்பெற்றது.

## கணக்குப் பரிசோதகர் சர்வாதிகாரியல்ல

### ஜில்லா ஜட்ஜியின் தீர்ப்பு

சென்னை ஸ்தல ஸ்தாபனக் கணக் குப் பரிசோதகர் காஞ்சிபுரம் முனிஸி பாலிட்டியிலுள்ள 16 கவுன்ஸிலர்களைக் கொண்ட 2 கோஷ்டியாரை முறையே ரூபாய் 1,203 க்கும் ரூ. 969—15—9 க்கும் சர்சார்ஜ செய்த உத்தரவை செங்கற்பட்டு ஜில்லா ஜட்ஜ் ஸ்ரீ பி. என். ராமசாமி ஐ. ஸி. எஸ். தள்ளுபடி செய்துவிட் டார்.

மேற்சொன்ன கவுன்ஸிலர்கள் சுத் திகரிப்பு வேலைகளுக்காக சில காளை களையும் டிரைவர்களையும் மாதம் ரூ. 14 வீதம் சப்ளை செய்வதற்காக வந்த அதிகச் செலவுள்ள டெண்டர்களை ஏற் றுக்கொண்டனர். நகர விளக்குகள் போட விளக்கு 1-க்கு மாதம் ரூ. 0—13—9 வீதம் வந்த அதிகப்படி டெண்டரைக் கவுன்ஸிலர்கள் ஏற் றுக் கொண்டனர். காளைகள், டிரை வர்கள் இரண்டுக்கும் மாதம் ரூ. 11 வீதமும் விளக்குக்கு மாதம் ரூ 0-11-3 வீதமும், குறைந்தவிகித டெண்டர்களை முனிசிபல் கூட்டத்தில் நிராகரித்து விட்டார்கள். முனிசிபல் கணக்கு கோடு (விதி) 63—7 படி காரணங் கட்டாமல் குறைந்த விகித டெண் டர்களை கவுன்ஸிலர்கள் நிராகரித்து விட்டதாகக் கணக்குப் பரிசோதகர் குறிப்பிட்டு கவின்ஸிலர்களை சார்ஜ் செய்தார். இதன் பேரில் ராவ்பகதூர் ஸி. சாம்பசிவ செட்டியாரும் வேறு 5 கவுன்சிலர்களும் ஜில்லா ஜட்ஜ் முன் பாக சார்ஜ் ரத்துச் செய்யவேண்டு மென மனுச் செய்தார்கள். மற்றும் 9 கவுன்ஸிலர்களும் இதைப்போல் மனுச்செய்துகொண்டார்கள்.

நீதிபதி குறிப்பிட்டதாவது:—

"ஊரிலுள்ள டெண்டர்காரர்களை அங்கேயே வசிக்கும் கவுன்ஸிலர்களுக் குத்தான் தெரியும். நகர நிர்வாகத்தை நடத்துவதில் தங்களுக்குள்ள சொந்த உரிமையின்படி கவுன்ஸிலர்கள் சில குறைந்த டெண்டர்களை நிராகரித்து விட்டு அதிகச் செலவிலுள்ள டெண் டர்களை சில காரணங்களை குறிப்பிட்டு எடுத்துக் கொண்டால், காஞ்சிவரத் தைப் பற்றிய விஷயம் தெரியாத சென்னையில் வசிக்கும் ஸ்தல ஸ்தாப னக் கணக்குப் பரிசோதகர் கவுன் ஸிலர்கள் செய்வது சரியல்லவென்று எப்படிச் சொல்லலாமென எனக்குத் தெரியவில்லை, கணக்குப் பரிசோதகர் தம்மை ஒரு பெரிய சர்வாதிகாரி யென்று நினைத்துக்கொண்டு நடந் தால் ஸ்தல ஸ்தாபன நிர்வாகத்தை நடத்துவது சாத்தியமில்லையென்று நினைக்கிறேன்.

### காரைக்குடி நகரசபை

காரைக்குடி நகரசபையின் சாதா ரணக் கூட்டம் ஒன்று 11—5—40 மாலை 5 மணிக்கு நகரசபை மண்ட பத்தில் நடைபெறும்.

இராமச்சந்திரபுரம்:—ஸ்ரீ ராமகிருஷ்ண வாலிபர் சங்கத்தின் 5-வது மாதாந்திரக் கூட்டம் 3—5—40 மாலை 5 மணிக்கு ஸ்ரீ இளையபெருமாள் தலைமையில் நடை பெற்றது. வ. தியாகராஜன், ச. முத்து ராமன், சுப. அண்ணுமலை, அ. அருணுச லம், வை. பூமிநாதன் ஆகியோர் பேசினர் கள். தலைவர் முடிவுரையில் கைத்தொழில் அபிவிருத்திக்காக ரூ. 100 அளிப்பதாகக் கூறினர். அவர்கள் செய்யும் உயர்ந்த சேவையான கிராம சேவையில் இவர்கள் ஊக்கம் காட்டியதற்கு சந்தோஷமடைவ தாகவும் மிகுந்த சந்தோஷத்துடன் திரி சாரணர் இல்லத்தைத் திறந்து வைப்ப தாகவும் சொன்னர்.

## இராமனுதபுரம் ஜில்லா அரசியல் மகாநாடு

5-ம் பக்கத் தொடர்ச்சி

என்ருர்கள். ஜெட்லண்ட் பிரபு முடியவே முடியாது என்ருர்; பதவி வேண்டவே வேண்டாம் என்ருர்கள் நம் தலைவர்கள். ஜெட்லண்ட்பிரபு படிப் படியாக இறங்கி வந்தார். சரியென்று சம்மதித்தார். எப்போதுமே ஜெட்லண்ட்பிரபு உச்சியிலிருந்தே பேசுவது வழக்கம். ஆனுல் இறங்குவதும் உருண்டு வீழ்வது போலவே இருக்கும்.”

“காங்கிரஸ் வெள்ளையர் கலப்பில்லாத சுயநிர்ணய சபைவேண்டுமெனக் கோருகிறது. இது முடியாதென்று சொன்னவர்கள் இறங்கிவந்து “அதை ஒப்புக்கொள்கிரேம்; எல்லாக் கக்ஷியாரும் ஒப்புக்கொள்வார்களா?” என்று கேட்கிருர்கள் இந்திய உதவி மந்திரி மத்யஸ்தம் செய்ய நாங்களும் இருக்க இடம் வேண்டுமெனக் கேட்கிருர். இதற்கு நம் மந்திரிகள் ராஜிஞமா செய்த தியாகமே ஏது. ஆனுல் ஜின்ஞ, வெள்ளையர் வாத்திய கோஷத்துக்கேற்ப ஆடுகிருர். வெள்ளையர் பலத்தால் இந்த சுயநல வாதிகள் நிற்கிருர்கள். அது போய்விட்டால் வீழ்வார்கள். எல்லா மதஸ்தாபனங்களும் வெள்ளையர் ஆதரவினுல் முட்டுக்கட்டை போடும் ஸ்தாபனங்களேயாகும். நமக்குள் ஒற்றுமை ஏற்பட்டால் வெள்ளையர் வெளியேற வேண்டிவரும். மகாத்மாவின் தலைமையில் போராட்டம் நடப்பது இதுவே கடைசி. மகாத்மா எண்ணிக்கையை விரும்பமாட்டார். கட்டளையைத் தாங்கும் குணமும் தக்ளியும் சர்க்காவும் கையிலேந்தும் உண்மை ஊழியமும் சத்யாக்கிரகிகளுக்கு வேண்டும். “பெண்டு பிள்ளைகளிருக்கின்ருர்களே, போரில் எப்படி இறங்குவது” என்று ஒரு சிலர் நினைக்கிருர்கள். மரத்தை வைத்தவன் தண்ணீர் விடுவான், இலை போட்டவன் சாதம் போடுவான் என்று வேதாந்தம் பேசும் நம்மவர் இப்படிச் சொல்லலாமா? புருஷன் நோயாகப் படுக்கையிலிருந்தால் பெண்டு பிள்ளைகள் தங்கள் வயிற்றுக்கும் சம்பாதித்து வைத்தியருக்கும் கொடுத்து வருகிருர்களல்லவா? படுக்கையிலிருந்த கணவன் இறந்துபோனதாக வைத்துக்கொள்ளுங்கள். அப்போது பெண்டு பிள்ளைகளைப்பற்றி என்ன முடிவு செய்வது? ஆகவே இவையெல்லாம் வீண்வாதங்கள். சத்யாக்கிரக அக்னியில் குதிக்க ஆடவர்களும் பெண்களும் ஏராளமாக முன்வரவேண்டும். ராமனுதபுரம் ஜில்லாவில் இதுவரை 400பேர்களும் தமிழ்நாட்டில் 3000பேர்களும் சத்யாக்கிரகிகளாக பதிவு செய்திருப்பதாக அறிகிறேன். இது போதாது. இந்த ஜில்லாவில் இன்னம் ஏராளமானவர் உறுதி மொழிப்பத்திரிகையில் கையெழுத்துப் போடவேண்டும். நாம் சத்யாக்கிரகத்திற்கு புதியவர்களல்ல. அதைப் பரீட்சித்துப் பார்த்தவர்கள். வெற்றிப் பெற்றவர்கள். நமக்குள்ளே எவ்வித மனத்தாங்கல்களும் வேற்றுமைகளும் இருக்கக் கூடாது. நமது லக்ஷ்யத்திற்கு எல்லோரையும் அழைத்துச் செல்லவேண்டும். மெதுவாக நடப்பவர்களை விட்டுப் போகக்கூடாது. இதற்காக மகாத்மா காந்தியை ஏகத்தலைவராக தேர்ந்தெடுத்திருக்கிரேம். எம்மான் காந்தியின் கட்டளைகளை எதிர்பாருங்கள்; இறுதிப் போராட்டத்துக்கு தயாராகுங்கள்; வெற்றி நிச்சயம்.”

மகாநாட்டுப் பந்தலில் ராட்டை—தக்ளி போட்டி நடைபெற்றது. பிற்பகல் 3-30 மணிக்கு ராஷ்டிரபதி அஸாதின் திருஉருவப்படத்தை ஆலிஜனுப் மொஹைதீன் மரைக்காயர் திறந்துவைத்தார். தேவகோட்டை இந்துஸ்தான் சாரணச் சங்கத்தாரின் தொண்டு போற்றத்தக்கது. வரவேற்புக்கழகத்தார் எல்லா விஷயங்களிலும் நன்கு கவனஞ்செலுத்தியது சிலாகிக்கத்தக்கதே. தேவகோட்டை ஹரிஜனக் காலனி மாணுக்கர்களின் பின்னல், நெய்தல், தச்சுவேலை முதலிய காட்சிகள் நடைபெற்றன. விவசாயப் பொருள்கள் காட்சிக்காக வைக்கப்பட்டிருந்தன. அகில பாரத சர்க்கா சங்கத்தாரின் கதர் கண்காக்ஷியும் நடைபெற்றது.

### மாலையில் பொதுக்கூட்டங்கள்

ஜவகர் மைதானத்தில் மாலை 6 மணிக்கு ஸ்ரீ மெ. சி. மாணிக்க வாசகன் தலைமையில் காங்கிரஸ் பொதுக் கூட்டம் நடைபெற்றது. சர்தார் வேதரத்தினம், மொகைதீன் மரைக்காயர், காம்ராஜ் நாடார், குமாரசாமி ராஜா, முகமது மொகையதின், ஸ்ரீமதி தாயம்மாள் ஆகியோர் பேசினுர்கள்.

### தேச ஊழியர் மகாநாடு

7—5—40 பிற்கல் 1-30 மணிக்கு மகாநாட்டுப் பந்தலில் தேச ஊழியர் மகாநாடு நடந்தது. ஜனுப் எஸ். ஏ. ரஹீம் தலைமை வகித்தார். ஸ்ரீ ஆர். கிருஷ்ணசாமி திறந்து வைததார். பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

### மஹேஸ்வர பூஜை

13-5-40உ தேவகோட்டை முப. வீட்டார் நடத்தும் மஹேஸ்வர பூஜையில் குகப்பெருமானின் பவனியும்இன்னிசைக்கச்சேரிகளும் நடைபெறும்.

## சிவகெங்கை தாலுகா பொதுஜனங்களுக்கு அறிவிப்பு

தேவகோட்டை சப் கலெக்டர் எம். எஸ். சிவராமன் ஐ. ஸி. எஸ். அவர்களின் தலைமையின் கீழ் கூடிய விலை நிர்ணயக் கமிட்டிக் கூட்டத்தில் அடியிற் கண்ட விலை தாரணைப்படி வியாபாரிகள் சித்திரை மாதத்தில் விற்பனை செய்ய வேண்டியதாய் முடிவு செய்யப்பட்டிருக்கிறது. அடியிற்கண்ட விலைகளுக்கு மேற்படாமல் விற்கவேணுமாய் தெரிவிக்கப் படுகிறது.

| | | | |
|---|---|---|---|
| நெல் முதல்தரம் | ரூ. 1-க்கு | 11 | படி |
| ஷை 2ம் தரம் | | | |
| புழுங்கல் அரிசி | ,, | 5¼ | ,, |
| மல்லிகைச் சம்பா | ,, | 5½ | ,, |
| கார் அரிசி | ,, | 6 | ,, |
| குருணை ¼ உடைப்பு | ,, | 6½ | ,, |
| ஷை ½ உடைப்பு | ,, | 5¾ | ,, |
| ராகி | ,, | 10 | ,, |
| து. பருப்பு | ,, | 4-4¼ | ,, |
| உ. பருப்பு | ,, | 3-3½ | ,, |
| பாசிப் பருப்பு | ,, | 4¼-4½ | ,, |
| கடலை | ,, | 4¼-4¾ | ,, |
| ஷை பருப்பு | ,, | 3¾-4 | ,, |
| காணம் | ,, | 6½ | ,, |
| மல்லி | ,, | 6 | ,, |
| உப்பு | ,, | 11 | ,, |
| சர்க்கரை (பழுப்பு) | வீசை 1-க்கு | 0—9—0 | |
| ஷை (நாட்டு) | ,, | 0—4—6 | |
| அஷ்டகிராம் | ,, | 0—8—6 | |
| மிளகாய் (வத்தல்) | ,, | 0—9—0 | |
| தீப்பெட்டி | 1-க்கு | 0—0—3 | |
| திருப்பூர் வேஷ்டி | 1 துண்டு | 0—7—9 | |

கோட்டையூர்: பாரதி மாணவர் கழகம் இரண்டாவது ஆண்டுக்கு தலைவராக ஸ்ரீ என். வெள்ளையனும், உபதலைவராக ஸ்ரீ ஸி. டி. நாராயணனும், காரியதரிசிகளாகத் ஸ்ரீமான்கள் என். அண்ணுமலையும், கே. ஆர். ராமநாதனும் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர். முதலாவது கூட்டம் 1—5—40உ ஸ்ரீ என். வெள்ளையன் தலைமையில் பாரதி வாசகசாலையில் நடைபெற்றது. திரு. ஸி. டி. நாராயணன் 'நாட்டுப்பற்று' என்னும் பொருள்பற்றி பேசினுர். தலைவர் முடிவுரையுடன் கூட்டம் கலைந்தது.

## எப். ஆர். எஸ். பட்டம் பெற்ற முதலாவது இந்தியன்

(9-ம் பக்கம் தொடர்ச்சி)

ஓட்டிக்கொண்டு வந்துசேர்ந்தது. அதேவருஷம் ஏப்ரல் 26-ந்தேதி புலாலுடம்பைப் பிரிந்தார். ராமானுஜம் இறக்கவில்லை. அவர் இறக்கமாட்டார். ஏன்? பிறவிக்கணக்கன் அல்லவா? அது எப்படிச் சொல்லலாம். என்று கேட்பீர்கள். இப்பொழுதும் ராமானுஜத்தைப் பற்றி பேசியும் எழுதியும் வருகிரேமல்லவா?

“இன்றுளார் நாளைமாள்வார்
புகழுக்கும் இறுதியுண்டோ”

என்ற கம்பன் அருள்வாக்கு பொய்க்குமா?

ராமானுஜத்தின் கணித சம்பந்தமான ஆராய்ச்சிகளும் சில முறைகளும் வியக்கத்தக்கவை. பெருங்கணக்குகளின் விடையை 'டக்' எனச் சொல்லிவிடுவான். அவனுடைய மார்க்கம் பிறரால் பின்பற்ற முடியாது. கணித சம்பந்தமான பல நுணுக்கங்களைக் கண்டுபிடித்திருக்கிருர். அவரது கணக்குகளை இதுவரையிலும் எவருமே செய்து முடிக்கவில்லை. சென்னை யூனிவர்ஸிட்டி ஹானர்ஸ் பரீக்ஷைகளில் ராமானுஜத்தின் கேள்விகள் சில கேட்கப்படும். மாணுக்கர்கள் சரிவரச் செய்து விடுவார்களென்ற நோக்கம் யூனிவர்ஸிட்டிக்கு இல்லை. இந்த கணக்குகளில் ஏதாவது ஒரு பாகமாவது மார்க்கத்தில் எந்த பாகமாவது சரியாயிருந்தால் போதும் பூரா மார்க்குகளும் கொடுக்கப்படும் ராமானுஜம் கணக்குகளுக்கு அவ்வளவு மதிப்பு.







# எப். ஆர். எஸ். பட்டம் பெற்ற ★ முதலாவது இந்தியன்

## பாடசாலையில் 'தூங்குமூஞ்சி'ப் பட்டம்

★

'ஸண்டே டைம்ஸ்' பத்திரிகையில் ஸ்ரீ எஸ். கே. ராவ் எழுதிய ஆங்கிலக் கட்டுரையைத் தழுவி 'சிகு' தமிழில் இதை வரைந்திருக்கிருர். இதில் கணித சாஸ்திர நிபுணரைப்பற்றிய சில ரசமான குறிப்புகள் கூறப்பட்டிருக்கின்றன.

இயற்கையிலேயே சில மனிதர்களுக்கு சில விஷயங்களில் அபார ஞானம் ஏற்பட்டிருப்பதை உலக சம்பவங்கள் அறிவிக்கின்றன. இலக்கண ஆராய்ச்சியில் ஆயுள் பூராவும் ஈடுபட்ட பண்டிதர்களுக்கு பாட்டு எழுத இயலாததைப் பார்க்கிரேம். ஆனுல் சிலர் அலக்ஷ்யமாக அழகிய பாடல்கள் பல பாடிக் குவித்துவிடுகிருர்கள். இவர்களுடைய அதியற்புதப் பாடல்களினுள்ளேயிருந்து யாரோ ஒருவர் பேசுவதுபோலத் தோன்றுகிறது. இலக்கணமெல்லாம் இயற்கையாகவே அமைந்து விடுகிறது இப்பாக்களில். இவர்களை வர கவிகள் என்றும் (Divine poet) இயற்கைக்கவிகள் (Born poet)என்றும் உலகம் கூறுகிறது. இது போலவே வெவ்வேறு துறைகளில் நுண்ணிய ஞானம் படைத்தவர்களையும் காண்கிரேம். ஒருவர் சங்கீத விற்பன்னராயிருக்கலாம்; பிறிதொருவர் பேர்பெற்ற அரசியல் ஞானியாக அவதரிக்கலாம். இன்னெருவர் கணித சாஸ்திரத்தில் அதிமேதாவியாகத் தோன்றலாம். இம்மேதாவிகளுக்கு விசேஷமாக பிறரிடத்தில் கற்றுக் கொள்ளவேண்டுமென்ற தேவைகூட கிடையாது. இம்மகான்கள் பூலோகத்தில் அபூர்வமாகத் தோன்றுகிருர்கள். ஆங்கிலத்தில் இவர்களை (genius) என்று சொல்லப்பட்டு வருகிறது. இம்மேதாவிகளின் பிறப்புக்கும் அபார ஞானத்துக்கும் என்ன காரணமென்பதை ஒருவேளை வருங்கால விஞ்ஞானிகள் அறிவிக்கக்கூடுமென்று கருதுவதைத்தவிர வேறு வழியில்லை. இம்மாதிரியான பல மேதாவிகள் நமது பாரததேசத்தில் தோன்றியிருக்கிருர்கள். தோன்றியும் வருகிருர்கள். அவர்களிலொருவரைப்பற்றியே நாம் ஈண்டு பிரஸ்தாபிக்க விரும்புகிரேம்.

கும்பகோணத்தில் ஒரு அக்ரகாரம். ஏழைக் குடும்பம். புருஷனுக்கு கணக்குவேலை. அவர்களுக்கு ஒரு பையன். டவுன் ஹைஸ்கூலில் படித்து வருகிருன். பாடசாலையில் அவனை தூங்குமூஞ்சி யென்றே விஷமப் பையன்கள் அழைப்பார்கள். உண்மையிலேயே அவன் சதா வானத்தைப் பார்த்து வாயைப் பிளந்து கொண்டேயிருப்பான். கூட்டத்தோடு கும்மாளமடிக்கும் வழக்கமே கிடையாது. தனிமையாகவே காணப்படுவான். 'கந்தையானுலும் கசக்கிக் கட்டு' என்ற பழமொழியை இந்தப் பையன் அநுசரிப்பதில்லை. அவனுடைய போக்கே ஒரு அலாதி. ஆனுல் சதா கணிதசாஸ்திரத்தைக் குறித்து ஏதேதோ பேசிக்கொண்டிருப்பான். இவனுடைய கணிதசம்பந்தமான பேச்சு இதர மாணுக்கர்களுக்கு பரம வேதனையையுண்டு பண்ணியது.

வகுப்பிலும் கணித மொன்றையே அவன் கவனமாகக் கற்றுவருவான். பாஷை, சரித்திரம், பூமி நூல், குடிநூல் இவையொன்றும் அவனுக்குப் பிடிக்கவே பிடிக்காது. ஏன்? புரியாது. கணித வாத்தியார்மட்டும் இந்த அபூர்வ மாணுக்கனின் புத்தி கூர்மையைக்கண்டுமூக்கின்மேல்கையைவைப்பார். ஆசிரியருக்குச்சந்தேகம் தோன்றினுல் அந்த மாணுக்கனிடம் கேட்டுத் தெரிந்துகொள்வார். ஆனுல் அவ்வளவு கணித நூல்களை அவன் கண்ணெடுத்தும் பார்த்தது கிடையாது. ஆகவே அவனை மகா பெரிய மேதாவி யென்றும் தெய்வீக அருள் பெற்றவன் என்றும் ஏன் சொல்லக்கூடாது? அவன் ஒரு நாள் அதுவும் அதி பால்யத்தில் தூங்கும்பொழுது அவனுடைய அதி தேவதையான நாமகிரி பிரத்யக்ஷமாகத் தோன்றி அருள் கொடுத்துப் போனுளாம். அதனுலேயே இந்தத்திறன் கிட்டியதாம். இது அவன் சொல்லியது. உண்மையா அல்லவா என்பதைப் பற்றி நாம் கவலை கொள்ள வேண்டியதில்லை. அவன் கணிதத்தில் மகா சூரன். இந்த மாணுக்கன் யார் தெரியுமா? கும்பகோணம் ஸ்ரீனிவாச ராமானுஜம். வேறு யாராயிருக்க முடியும்? அரசாங்கத்தார் ராமானுஜத்தின் கணித சாஸ்திரத் திறமையை மெச்சி உதவிச் சம்பளம் அளித்தார்கள். ஆனுல் சட்டப்படி பாஷையில் மார்க்குப் போதாதாகையால் உதவிச் சம்பளம் பெற முடியவில்லை. கணக்கில் திறமை யுண்டானுல் மட்டும் போதுமா? பாஷையிலும் அபிவிருத்தி வேண்டாமா? இது ஒரு அற்புதச் சட்டமென சிலர் கருதலாம். என்ன செய்வது. சட்டம் இடங்கொடுக்கவில்லை. இம்மாதிரியான சட்டங்களை மாற்றப்பட்டால்தான் இந்தப் பேச்சுக்கு இடமுண்டு. மேல் படிப்பு பரம ஏழையான ராமானுஜத்திற்கு சாத்தியமில்லை. படிப்புக்கும் பணம் தானேதேவை. ஏழைப் பிள்ளைகளுக்கு எவ்வளவு புத்தி கூர்மையிருந்தாலும் பணமில்லாவிடில் என்ன பயன்? அவர்கள் புத்தி யெல்லாம் தலைகாட்டக் கூடாது. தனவந்தன் பேச்சு சுத்த அபத்தமாயிருந்தாலும் அதை அநுசரிக்கவும் புத்திசாலித்தனமான பொன் மொழிகள் எனப் புகழவும் ஆயிரம் பேர் தயார். இது உலக இயற்கை.

குமாஸ்தா உத்தியோகத்தில் ஈடுபட்டான். பிழைக்கவேண்டுமே! பசிக்குப்படிப்புபயனளிக்குமா? ஆனுல் பேனு ஓட்டும்கைங்கரியத்தில்ராமானுஜத்திற்கு இஷ்டமேயில்லை. நெல்லூரில் வசித்துவந்த ராமச்சந்திர ராவ் ராமானுஜத்தைப்பற்றி கேள்விபட்டார். உடனேயே ராமானுஜத்தை வீட்டுக்கு அழைத்து வந்துவிட்டார். அவனிடம் அபாரஞானத்திற்கான அறிகுறிகள் காணப்படவில்லையென்று ராவ் நினைத்தார். கண்கள் மட்டும் வைரடால் மாதிரி மின்னிக்கொண்டிருந்தன. நோட்டைத் திறந்து சில கணக்குகளையும் அவைகளை செய்யவேண்டிய முறைகளையும் எடுத்துத் சொன்னுன். ராமச்சந்திர ராவுக்கு கசப்புத் தோன்றியது. அங்குமிங்கும் பார்த்தார். 'இன்று போய் நாளைவா' எனச் சொல்வதற்கு வாயெடுத்ததும் குறிப்பையுணர்ந்த ராமானுஜம் சில இலகுவான கணக்குகளைப்பற்றி பிரஸ்தாபிக்க ஆரம்பித்தான். ராயருக்கு இவை புரிந்தன. ராமானுஜத்தின் 'ஸ்டாண்டர்டு'க்கும் கணித ஆசிரியரின் ஸ்டாண்டர்டுக்கும் எவ்வளவு வித்தியாசம். எண்ணிறந்த கணித நூல்களைப் புரட்டிப் புரட்டிப் படித்தவர் ராமச்சந்திரராவ். ராமானுஜத்திற்கு அந்த நூல்களின் பேர்கூட அப்பொழுது தெரியாது. சந்தோஷித்தவரான ராவ் என்ன வேண்டுமெனக்கேட்டார். அவருடையகேள்வியில்அவர் என்ன வேண்டுமென்ருலும் கொடுத்துவிடுவார் போலத் தோன்றியது. ஆனுல் ராமானுஜம் கேட்டது ஒரு வேளை உணவும் கணிதத்திற்கான ஒய்வு நேரமுமேயாகும். வித்தியாஸத்தைப் பார்த்துக்கொண்டோமல்லவா?

ஸர். பிரான்ஸிஸ் ஸ்ப்ரிஸ் என்ற வெள்ளையர் சென்னை துறைமுக அதிகாரியாக யிருந்து வருகிருர். அவர் ராமானுஜத்திற்கு அக்கௌண்டன்ட் அலுவல் கொடுத்தார். இதுவேளை ஓய்வு நேரமும் ராமனுஜத்திற்கு கிடைத்தது. கணிதநூல்களைப் பார்ப்பதும் சிந்திப்பதும் தான்வேலை. ராமானுஜத்தின் பெருமை மெள்ள பரவத்தொடங்கியது. எவ்வளவு காலம்தான் அடங்கி ஒடுங்கி பொந்துக்குள் இருக்கமுடியும். மாதாமாதம் சென்னைசர்வகலாசாலை 75 ரூபாய் உபசாரச் சம்பளம் அளிக்க முன் வந்தது. சேஷு அய்யர் என்பவர் கேம்பிரிட்ஜிலுள்ள கணித ஆசிரியர் ஹார்ட்டிதுரைக்கு ராமானுஜத்தின் கணித முறைகளையெல்லாம் அறிவிக்கும்படி தூண்டினுர். புரொபஸர் ஹார்ட்டிக்கு ராமானுஜத்தின் மீது அளவுகடந்த அன்பு பிறந்தது. அவனது கணித வல்லமை அற்புதமானதென்பதை அறிந்துகொண்டார். கேம்பிரிட்ஜுக்கு வரவேண்டுமெனக் கேட்டுக் கொண்டார். ஆனுல் வைதிகம் ராமானுஜத்தின் மேனுட்டுப் பிரயாணத்தை. இந்தத்தடவை தடைசெய்துவிட்டது. புரொபஸர் ஹார்டி முயற்சியை விட்டுவிடுபவரல்ல. எப்படியாவது ராமானுஜத்திற்கு கேம்பிரிட்ஜ் கல்விப் பயிற்சி அளிக்கப்பட்டுத் தானுக வேண்டுமென உறுதிகொண்டுவிட்டார். சென்னை யூனிவர்ஸிட்டிக்கு எழுதினுர். கடைசியாக 1914ல் ராமானுஜம் இங்கிலாந்துக்குப் பிரயாணமானுர். வைதிகம் வாய் பேசவில்லை. வருஷத்திற்கு 250 பவுன் உதவிச் சம்பளம் சென்னை சர்வ கலாசாலை கொடுத்து வந்தது. புரொபஸர் ஹார்டியின் மேற் பார்வையில் ராமானுஜம் கணிதம் பயின்ருர். சிக்கலான கணித நுட்பங்களெல்லாம் ராமானுஜத்திற்கு ஒரு விளையாட்டு; இதென்ன அற்புத சக்தியென்று புரொபஸர்கள் ஆச்சரியமடைந்தார்கள். 1918-ல் தாய்நாடு திரும்பினுர். மேனுட்டு சீதோஷ்ண நிலைமை அவருக்கு ஒத்துக்கொள்ளவில்லையாதலால் காசநோயால் பீடிக்கப்பட்டார். ஐந்து வருஷகாலம்இங்கிலாந்துவாசம் கணித சாஸ்திரிக்கு அளித்த காணிக்கை காசநோய். ராமானுஜத்தின் பெருமை எங்கும் பரவிவிட்டது. கணித ஆசிரியர்களெல்லாம் ராமானுஜத்தின் பெயரைக் கேட்டவுடன் பூரிப்படைவார்கள். ராயல் சங்கத்தின் அங்கத்தினராக ராமானுஜம் தேர்ந்தெடுக்கப்பட்டார். இந்த ஸ்தானம் கிடைக்கப் பெற்ற முதல் இந்தியன் ஸ்ரீனிவாசராமானுஜம் தான். மாணவ பருவத்தில் ராமானுஜத்திற்கு அளிக்கப்பட்ட பட்டம் தூங்குமூஞ்சி; இப்பொழுது கிடைத்திருக்கும் பட்டம் எப். ஆர். எஸ். இதனுலேயே தான் எந்த புற்றில் எந்த பாம்பு இருக்கிறதோ என்று அறிஞர் அருளி யிருக்கின்ருர்கள் போலும். புரொபஸர் ஹார்டி சென்னை யூனிவர்ஸிட்டி ரெஜிஸ்தாருக்கு எழுதியிருக்கும் கடிதத்தில் குறிப்பிட்டிருப்பதைப் பாருங்கள்.

“இதுவரையிலும் எந்த இந்தியனும் அடையாத பெயரும் பெருமையும் பெற்றே ராமானுஜம் இங்கிலாந்திலிருந்து திரும்புவான். இந்தியா இவரை கிடைத்தற்கரிய பொக்கிஷமெனப் போற்றும்.”

காசநோயை குணமாக்குவதற்கு பல பிரபல ஆஸ்பத்திரிகளுக் கெல்லாம் போய்ப்பார்த்தார்; பயனில்லை. 1919-ம் ஆண்டு மார்ச்மாதம் தாய் நாடு வந்துசேர்ந்தார். காசநோயும்

(8-ம் பக்கம் பார்க்க)

# காரைக்குடியில் காம்ராஜ்-சத்தியமூர்த்தி விஜயம்

## மகாத்மாவின் தலைமையில் சுயராஜ்யம்

### 1000 பேர்கள் சத்யாகிரகிகளாக சேரவேண்டும்

★

தமிழ்நாட்டுக் காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ காம்ராஜ் நாடாரும் சென்னை, மேயர் ஸ்ரீ எஸ். சத்தியமூர்த்தி அய்யரும் 3-5-40 காலை 8-15 மணிக்கு காரைக்குடி ஸ்ரீ கிருஷ்ணா டாக்கீஸுக்கு வந்து சேர்ந்தார்கள். தலைவர்களை பாண்டு வாத்திய கோஷத்துடன் வரவேற்று ஹாலின் உள்ளே அழைத்துக்கொண்டு வரப்பட்டது. அதற்கு முன்னடியே ஏராளமானவர்கள் அங்கு கூடியிருந்தார்கள். 'வந்தேமாதரம், மகாத்மா காந்திக்கு ஜே' என்ற கோஷங்கள் வானைப்பிளந்தன. கூட்டத்திற்கு ஸ்ரீ ஆ. ரு. ஆ. ராம. சொக்கலிங்கஞ் செட்டியார் தலைமைவகித்தார். ஸ்ரீ வி. பரமசிவன் வரவேற்று சில வார்த்தைகள் பேசினர். நகரசபை உபதலைவர் ஸ்ரீ கெ. மு. லெ. மெய்யப்பனம்பலம் தலைவர்களுக்கு பூமாலைகள் அணிவித்தார். தேசிய முஸ்லீம் சங்கச் சார்பாகவும் ஸ்ரீ காம்ராஜுக்கும் ஸ்ரீ சத்தியமூர்த்திக்கும் மாலைகள் அணிவிக்கப்பட்டன. கூட்டத்தலைவரின் முன்னுரைக்குப் பின்னர் தமிழ்நாட்டுக் காங்கிரஸ் தலைவர், ஸ்ரீ காம்ராஜ் பிரசங்கம் செய்தார். அவர் பேசியதாவது:-

"தற்பொழுது நமது நாட்டில் பெரிய நெருக்கடி ஏற்பட்டிருக்கிறது. நாம் இருப்பதா, இறப்பதா என்ற நிலைமையிலிருக்கிறோம். இதற்கு முடிவு கட்டித் தானுகவேண்டும். சுயராஜ்யம் வெகு சமீபத்திலேயே இருக்கிறது. மகாத்மா காந்தியே நமது தலைவர். அப்பெரியாரின் தலைமையின் கீழ் நாம் சுதந்திரம் அடைந்தே தீருவோம். இதைப்பற்றி எவ்வித சந்தேகமும் வேண்டியதில்லை. நாம் சுதந்திரமடையாமலிருந்தால் கேவலம் புழுக்களைப்போல மாண்டுபோக நேரிடுமென்பதை ஒவ்வொருவரும் வெகு நன்ருக கருத்திலிருத்த வேண்டுமெனக் கேட்டுக்கொள்கிறேன். பிரிட்டனுக்கு நம்மிடத்தில் நமது தேசத்தை ஒப்படைத்து விடுவதைத் தவிர வேறு வழியில்லை. இவ்விஷயத்தை பிரிட்டன் அறிந்துகொள்ளல் அவசியமெனக்கூற விரும்புகிறேன். இந்த நிலைமையில் நாம் விடுதலை பெறுவதற்கு நமது மாபெருந்தலைவர் மகாத்மா காந்தியின் கட்டளைகளை நிறைவேற்றவேண்டுவதே நம்மவரின் கடமையாகும். இதைத்தான் காங்கிரஸ் மகாசபை கேட்டுக்கொள்கிறது. இதற்கு காங்கிரஸின் நிர்மாணத்திட்டங்களை நிறைவேற்றவேண்டும். காங்கிரஸ் நிர்மாணத் திட்டங்களில் நான்கு முக்கிய விஷயங்கள் அடங்கியிருக்கின்றன. ஹிந்து-முஸ்லீம் ஒற்றுமை, தீண்டாமை விலக்கல், கதர் அணிதல், மதுவிலக்கு.

#### ஹிந்து-முஸ்லீம் ஒற்றுமை

வெள்ளையர் நம்மை துப்பாக்கி முனையால் ஆளவில்லை. நம்மிடையே மதவேற்றுமைகளை மிகைப்படுத்தி நம்மைப் பிரித்து ஆள்வதற்கே நினைக்கிருர்கள். இது விஷயத்தில் நாம் அனைவரும் வெகு ஜாக்கிரதையாகவும் நிதானமாகவும் நடந்துகொள்ளவேண்டும். நம்மிடையே ஒற்றுமை வேண்டுவது மிக மிக அவசியமாகும்.

#### தீண்டாமை விலக்கு

நமக்குள் தீண்டாமை என்னும் அநீதி அனுவளவேனும் தலைக்காட்டக் கூடாது. இதனுல் மனிதனை மனிதன் அடிமைப்படுத்தவும் கேவலமாகக் கருதவும் இடமேற்படுகிறது. இது அறவே அகற்றப் படவேண்டும். அடுத்தபடியாக நாம் எல்லோரும் கதர் அணிதல் வேண்டும்நான்காவதாக மதுவிலக்குச் செய்யவேண்டும். காங்கிரஸ், இந்த நான்கையுமே நாம் செய்யவேண்டுமெனக் கேட்டுக்கொள்கிறது. இந்த ஆக்க வேலைகளை நிறைவேற்றுவதாயிருந்தால் சுதந்திரம் தானே வந்து சேரும். மகாத்மா காந்தியே நமது தலைவர். அப்பெரியாரது தலைமையின் கீழ் நடப்போம். அவரையே பின்பற்றுவோம்—வந்தேமாதரம்.

அடுத்தபடியாக சென்னை மேயர் ஸ்ரீ எஸ். சத்தியமூர்த்தி அய்யர் பேசியதாவது:

இந்த அகால வேளையில்கூட திரளாக ஜனங்கள் கூடியிருப்பதைக் கண்டு நான் மகிழ்ச்சி யடைவதோடு நன்றியறிதலையும் செலுத்திக்கொள்கிறேன். காங்கிரஸ் வேலைகளில் காரைக்குடி முன்னணியிலேயே நின்றது; நிற்கின்றது, நிற்கவேண்டுமெனவும் கேட்டுக்கொள்கிறேன். காரைக்குடியானது பணக்காரர்களுடைய நகரமாகும். செட்டிநாட்டுக்கு தலைநகரமென்றே சொல்லலாம். செல்வந்தர்கள் காங்கிரஸில் சேருவதிலும் காங்கிரஸுக்கு உதவி செய்வதிலும் தயக்கங் காட்டக்கூடாது. மேனுட்டில் பணம் படைத்த ஆங்கிலேயர் யுத்தத்திற்கு பெருவாரியாக வரிசெலுத்தி வருகிருர்கள். 21 வயதுக்கு மேலானவர்களெல்லோரும் யுத்தத்தில் அங்கு சேரவேண்டும். மேலும் மகாத்மா காந்தியின் தலைமையிலேயே பணக்காரர் கலந்து கொள்வதுதான் நல்லது; இல்லாவிட்டால் அவர்களுக்கு மிகுந்த சிரமமும் ஆபத்தும் நேரிடும். இம்மாத முடிவுக்குள் இந்நகரில் ஆயிரம் பேர்களுக்குக் குறையாமல் காங்கிரஸ் உறுதிப் பத்திரிகையில் கையெழுத்துப் போட்டு சத்யாகிரகிகளாக பதிவு செய்துகொள்ளல் வேண்டும். அப்படியானுல்தான் இந் நகருக்கு கவுரவ முண்டு.

ஜில்லா போர்டுகளைப் பிடித்தால்மட்டும் போதாது. இதனுல் ஜில்லா போர்டுகளையும் இதர ஸ்தாபனங்களையும் காங்கிரஸ்காரர்கள் பிடித்துக்கொள்ள வேண்டாமென்று நான் கூறவில்லை. அதோடு தேசத்தையும் பிடிக்க வேண்டும். இராமனுதபுரம் ஜில்லாவில் ஹிந்து—முஸ்லிம் தகராறு ஜாஸ்தியாகயிருக்கிறதாம். அங்குள்ள முஸ்லீம்களைப் பஞ்சாபுக்கு அழைக்கப்படுகிருர்களாம். பஞ்சாபில் பேசும் பாஷையான உருது தமிழ்நாட்டு முஸ்லீம்களுக்குத் தெரியாது. இவ்வித பிளவு இருக்கக்கூடாது. பெருவாரியாக முஸ்லீம்கள் காங்கிரஸில் சேர வேண்டும். அடிமைக்கு மதமில்லையென்பதை ஹிந்துக்களும் முஸ்லீம்களும் உணரவேண்டும். நாம் எல்லோரும் இன்று அடிமைகளாகவேயிருக்கிறோம். இந்த நிலைமையில் சனதனிகள் வேறு கூச்சல் போடுகிருர்கள். நான் ஒரு சனதனி; காயத்திரி எந்நாளும் ஜபிப்பேன். கீதா பாராயணம் நாள்தோறும் செய்வேன். சந்தியாவந்தனம் செய்யத் தவறமாட்டேன். பரிபூர்ண சுயராஜ்யத்திலேயே தான் ஸனதன தர்மம் வாழமுடியும் என்பதை அழுத்தமாகக் குறிப்பிட்டுக் கொள்கிறேன். சுயமரியாதைக்காரர்கள் வேறு சத்தம் போடுகிருர்கள். இக் கூட்டத்தார் கடவுளேயில்லையெனக் கத்துகிருர்கள்.

வெள்ளையர்களுக்கு நம்மோடு சமாதானம் செய்து கொண்டால்தான் வெற்றி. இந்த நிலைமையில் நாம் சரிவர நடந்துகொள்வது மிகவும் முக்கியமானதாகும். வெண்ணெய் திரண்டு வருகையில் தாழி உடைந்ததுபோல நம்மிடையே தகராறுகளும் மதவேற்றுமைகளும் கக்ஷிப் பிளவுகளும் இருப்பது பிசகாகும். நாம் ஒற்றுமையாகயிருக்கவேண்டும். எல்லோரும் நூல் நூற்கவேண்டும்."

கூட்டத்தலைவரின் சுருக்கமான பின்னுரைக்குப் பின்னர் ஸ்ரீ பரமசிவன் நன்றிபாராட்டி சில வார்த்தைகள் பேசினர். வரிகொடுப்போர் சார்பாக தலைவர்களுக்கு மாலைகள் அணிவிக்கப்பெற்றன. வந்தேமாதர கோஷத்துடன் கூட்டம் கலைந்தது.

(ந. நி.)

## ரயில் வண்டிகளின் போக்குவரத்து கால விபரம்

### திருச்சியிலிருந்து—மானமதுரைக்கு

| ஸ்டேஷன்கள். | 65 நி. பாஸ்ட் பாஸஞ்சர். | 1 நி. இண்டோ சிலோன் எக். | | * 33 நி. பாஸஞ்சர். | * 29 நி. பாஸஞ்சர். | 31 நி. பாஸஞ்சர். | 7 நி. தனுஷ் பாஸ்ட் பாஸஞ் |
|---|---|---|---|---|---|---|---|
| திருச்சிராப்பள்ளி ... | 4-0 | 7-30 | | | 13-20 | 17-33 | 22-15 |
| புதுக்கோட்டை வரு | 5-3 | 8-39 | | | 14-35 | 18-57 | 23-36 |
| புதுக்கோட்டை புற | 5-9 | 8-45 | | | 14-42 | 19-3 | 23-42 |
| நமனசமுத்திரம் ... | 5-20 | 8-55 | | | 15-0 | 19-14 | - - |
| திருமயம் ... | 5-34 | 9-9 | | | 15-13 | 19-28 | 0-5 |
| செட்டிநாடு ... | 5-48 | 9-23 | | | 15-27 | 19-42 | 0-21 |
| கோட்டையூர் ... | 5-58 | 9-33 | | | 15-36 | 19-51 | 0-31 |
| காரைக்குடி வரு | 6-7 | 9-50 | | | 15-57 | 20-10 | 0-49 |
| காரைக்குடி புற | 6-15 | 10-1 | | 14-27 | 16-57 | | 0.57 |
| தேவகோட்டை ரஸ்தா | 6-25 | 10-9 | | 14-35 | 17-5 | | - - |
| கல்லல் ... | 6-42 | 10-26 | | 14-52 | 17-22 | | 1-23 |
| அரண்மனை சிறுவயல் | 6-50 | - - | | 14-58 | 17-28 | | - - |
| நடராஜபுரம் ... | 7-0 | - - | | 15-8 | 17-38 | | 1-37 |
| காட்டரசன்கோட்டை | 7-12 | 10-48 | | 15-21 | 17-51 | | 1-52 |
| சிவகெங்கை | 7-23 | 10-59 | | 15-42 | 18-3 | | 2-4 |
| மானமதுரை | 8-0 | 11-30 | | 16-14 | 18-35 | | 2-33 |

* இக்குறியிட்ட வண்டிகள் நேரே மதுரைக்குச் செல்லுவன.

### மானமதுரையிலிருந்து—திருச்சிக்கு

| ஸ்டேஷன்கள். | 32 நி. பாஸஞ்சர் | 68 நி. பாஸஞ்சர் | 30 நி. பாஸஞ்சர். | 2 நி. இண்டோ சிலோன் எக் | 34 நி. பாஸஞ்சர். | 8 நி தனுஷ். பாஸ்ட்பாஸ |
|---|---|---|---|---|---|---|
| மானமதுரை ... | | 8-14 | 12-15 | 15-13 | 17-20 | 18-57 |
| சிவகெங்கை ... | | 8-49 | 12-51 | 15-41 | 18-2 | 19-31 |
| நாட்டரசன்கோட்டை | | 9-0 | 13-2 | 15-52 | 18-13 | 19-42 |
| நடராஜபுரம் ... | | 9-12 | 13-15 | - - | 18-25 | 19-54 |
| அரண்மனை சிறுவயல் | | 9-22 | 13-25 | - - | 18-35 | 20-4 |
| கல்லல் ... | | 9-29 | 13-32 | 16-13 | 18-41 | 20-10 |
| தேவகோட்டை ரஸ்தா | | 9-46 | 13-49 | 16-30 | 18-58 | 20-27 |
| காரைக்குடி வரு | | 9-53 | 13-56 | 16-37 | 19-8 | 20-34 |
| காரைக்குடி புற | 6-50 | 10-3 | 14-6 | 16-47 | | 20-44 |
| கோட்டையூர் ... | 7-0 | 10-13 | 14-17 | 16-57 | | 20-54 |
| செட்டிநாடு ... | 7-10 | 10-22 | 14-27 | 17-7 | | 21-4 |
| திருமயம் | 7-24 | 10-35 | 14-41 | 17-20 | | 21-18 |
| நமன சமுத்திரம் | 7-38 | 10-48 | 14-58 | 17-33 | | 21-31 |
| புதுக்கோட்டை வரு | 7-47 | 11-5 | 15-7 | 17-44 | | 21-43 |
| புதுக்கோட்டை புற | 7-53 | 11-11 | 15-13 | 17-50 | | 21-49 |
| திருச்சிராப்பள்ளி | 9-28 | 12-30 | 16-38 | 19-0 | | 23-0 |



## திருச்சி ரேடியோ

### மே. 9-உ வியாழன்

5-20 பண்ருட்டி சகோதரிகள்-பாட்டு, 6-05 ஸ்ரீமதி என். எஸ். தங்கம்-வீணை, 7-0 'எனக்குப் பிடிக்கிறது' ஆர். ஸ்ரீநிவாசன் பேசுவார், 7-50 கச்சேரி திருப்பாம்பரம் ஸ்வாமிநாத பிள்ளை-புல்லாங்குழல், மருங்காபுரி கோபாலகிருஷ்ணய்யர்-பிடில், பழனி சுப்பிரமணிய பிள்ளை-மிருதங்கம், வி. டி. எஸ். சேவுகபாண்டிய தேவர்-கஞ்சிரா, 9-20 செய்திகள், 9-50 டி. பி. ராமகிருஷ்ணன்-பாட்டு.

### 10-உ வெள்ளி

5-20 இலுப்பூர் நடேச பிள்ளை-நாகஸ்வரம், 6-05 ஸ்ரீமதி எம். கே. கனகாம்புஜம்-பாட்டு, 7-15 'அம்மா—கோதண்டராமன்' ஒரு ஹாஸ்ய நாடகம், 7-50 இலுப்பூர் நடேச பிள்ளை-நாகஸ்வரம், 8-50 ஸ்ரீமதி எம். கே. கனகாம்புஜம், 9-20 செய்திகள்.

### 11-உ சனி

6-05 எஸ். வி. பார்த்தசாரதி-பாட்டு, 7-0 உலகப்போக்கு ஆர். நாராயணன் பேசுவார், 7-50 எச். ராமச்சந்திர சாஸ்திரி-புல்லாங்குழல், 8-45 எஸ். பி. பார்த்தசாரதி-பாட்டு. 9-20 செய்திகள், 9-50 எச். ராமச்சந்திர சாஸ்திரி.

### 12-உ ஞாயிறு

5-20 ஸ்ரீமதி டி. வி. சரளா-பாட்டு, 7-0 தமிழில் 'சுடுசொல்' ஆர். பி. சேதுப் பிள்ளை, பேசுவார், 7-50 கே. கோபால ஸ்வாமி செட்டி-பாட்டு, 8-30 மானிஷ் பஞ்சகம், ஒரு நிகழ்ச்சி. 8-45 ஸ்ரீமதி வித்யா-வீணை, 9-20 செய்திகள், 9 50 ஸ்ரீமதி டி. வி. சுசீலா-பாட்டு.

### 13-உ திங்கள்

5-20 திருவீழிமிழலை கோவிந்தராஜ பிள்ளை சகோதரர்கள்- நாதஸ்வரம், 6-05 கே. ஏ. ராதாகிருஷ்ணபிள்ளை-பாட்டு, 7-0 'சமீபத்தில் வெளியிடப்பட்ட புஸ்தகம்' ஆர். வாசுதேவ சர்மா பேசுவார், 7-50 'காதமப்ரி' ஒரு நாடகம் வி. எஸ். ராமகிருஷ்ணன் எழுதியது, 8-45 கே. வி. ராதாகிருஷ்ணபிள்ளை-பாட்டு, 9-20 செய்திகள்.

### 14-உ செவ்வாய்

5-20 எச். எஸ். மத்வாச்சார் கோட்வாத்யம், 6-05 கே. வி. கேசவ பாகவதர்-பாட்டு,7-50 தேவகோட்டை நாராயண அய்யங்கார்-வீணை, தேவகோட்டை சுந்தரராஜ அய்யங்கார்-மிருதங்கம், 8-30 'மழை வரப்போகுது' ஒரு சிறு நாடகம் எஸ். குஞ்சிதபாதம் எழுதியது, 8-45 கே. வி. கேசவ பாகவதர்-பாட்டு, 9-2 செய்திகள் 9-50 தேவகோட்டை நாராயண அய்யங்கார்-வீணை, தேவகோட்டை சுந்தரராஜ அய்யங்கார்-மிருதங்கம்.

### 15-உ புதன்

5-20 டி. ஆர். ஸ்ரீநிவாஸ ராவ் ஸிக்தே-பாட்டு, 6-05 ஸ்ரீமதிகள் ஸி. லக்ஷிமிகாந்தம்மாவும், ஸி. ருக்மிணிஅம்மாவும்-பாட்டு 7-50 ஆஸ்தான வித்வான் டி. சௌடையா பிடில், தஞ்சாவூர் ராமதாஸ் ரா்வ்-மிருதங்கம், 8-45 ஸ்ரீமதிகள் ஸி- லக்ஷ்மி காந்தம்மாவும், ஸி. ருக்மணி அம்மாவும்-பாட்டு, 9-20 செய்திகள், 9-50 ஆஸ்தான வித்வான் டி. சௌடையா, தஞ்சாவூர் ராம்தாஸ் ராவ்.

---

## கலாவதி

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

சக்ரவர்த்தியை சமீபித்து இடறிய குரலில் இவ்வாறு சொன்னுள்.

"சாம்ராட், இவ்வேழையை மன்னிக்கவேண்டும். குற்றம் முழுவதும் என்னுடையதே. கலாவதி தேவி பரிசுத்தவதி. ஆம்—நான்—நான் பெண்ணல்ல; என் பெயர் வஸந்தன். தளபநாட்டு ராஜகுமாரன்; கலாவதி தேவியின் மீது காதல் கொண்டவன். என் மனோ நிலைமையை அவளிடம் அறிவிக்கும் முன்னர் அவள் இங்கு கொண்டுவரப்பட்டாள். ஆகவே இந்த ஜென்மத்தில் அப்புனிதவதியை அடைய எனக்குப் பாக்கியமில்லையென்ருலும் அம்மாதுக்கு தொண்டு செய்து மனச் சாந்திக் கொள்வதற்கே பெண் வேஷம் புனைந்தேன். இயற்கையிலேயே எனக்கிருந்த சங்கீத வன்மை இதற்கு அனுகூலமாயிருந்தது. அந்த புனிதவதி இதுவரையிலும் என்னை பெண் என்றே நம்பியிருக்கிருள்."

அக்பர் சக்ரவர்த்தியின் சித்தம் என்ன பாடுபட்டிருக்குமென்பதை நேயர்களே யூகித்து கொள்ளவேண்டும். கலாவதி கல்லாய் சமைந்து விட்டாள். பின்னர் வஸந்தன் தனது பெண் வேஷத்தை கலைத்து விட்டான். சக்ரவர்த்தியின் கண்கள் தீப்பொறிகளை கக்கின. வஸந்தனை காணவில்லை. ஒன்றுமே பேசாது திரும்பிவிட்டார் சாம்ராட்.

கலாவதி, தான் காண்பதெல்லாம் மெய்தானுவென்று நினைத்தாள். உலகமே தலைகீழாகச் சுற்றுவது போலத்தோன்றியது. இவ்விஷயத்தில் உண்மையில் தான் நிரபராதியென்ருலும் அதை எவ்வாறு நிரூபிக்கமுடியும். ராஜபுத்திரஜாதி நம்பிக்கைத் துரோகம் செய்யாது என்பதற்கு களங்கம் ஏற்பட்டதை உத்தம ராஜபுத்திர ரத்தம் நரம்புகளில் ஓடிக்கொண்டிருக்கும் கலாவதியால் பொறுத்துக் கொண்டிருக்கமுடியுமா? ஒரு வார்த்தையும் பேசாது போன அக்பர் சக்ரவர்த்தியின் மனப்பான்மையை எண்ணி எண்ணி பெரிதும் வியந்தாள். நீண்ட நேரம் மௌனம். நெடிய பெருமூச்சு. மனத்தில் உறுதியான எண்ணம். பளிச்சென மின்னிக் கொண்டிருக்கும் கூரியகத்தியை எடுத்தாள்; பார்த்தாள். சிரித்தாள். ஆஹா! அந்தச்சிரிப்பில் பயங்கரமும் கலவரமும் ஒலியும் எதிரொலியுமாக இலங்கியது. தனது இடதுகையில் சொருக்கெனக் குத்தினுள். ரத்தம் மட மடவென பாய்ந்தது. பேனுவை வலதுகையில் எடுத்தாள். ரத்தத்தில் தோய்த்து இவ்வாறு எழுதினுள்:—

"பிராணநாதா: தங்களை பிராணநாதா என்று கூறுவதற்கு ஒரு வேளை நான் யோக்கியதையற்றவள் என்று தாங்கள் நினைக்கலாம். உண்மையாகச் சொல்கிறேன். ராஜபுத்திரஜாதி நம்பிக்கைத் துரோகம் எந்நாளும் செய்யாது. இதை நிரூபணம் செய்வதற்கு இராஜபுத்திரப்பெண்மையின் பரிசுத்த ரத்தமே சாக்ஷியம் வகிக்கிறது.

அரசே, இது வரை என்மீது கிருபை செய்து வந்த தங்களுக்கு இவ்வேழை என்ன கைமாறு செய்யப் போகிறேன். எனது அந்தியகாலத்தில் தங்களுக்கு இதய பூர்வமான வணக்கத்தைச் செலுத்திக்கொள்கிறேன்.

எல்லாம் அந்த ஆண்டவனின் திருவிளையாடல்.

தங்களுக்கு
நம்பிக்கைத் துரோகம் செய்யாத
கலாவதி

இக்கடிதம் சக்ரவர்த்திக்கு அனுப்பப்பட்டது. ஓடோடியும் சக்ரவர்த்தி அந்தப்புரத்துக்கு வந்தார். ஆனுல் அவர் அங்கு ரத்த ஆற்றின் நடுவே கிடக்கும் கலாவதியின் சவசரீரத்தையேக் கண்டார்.

---

### குழந்தை பிறந்ததும் குரங்காயிற்று

மனிதன் குரங்கிலிருந்துதான் தோன்றினுன் என்பது டார்வின் கொள்கை. இப்பொழுது மனிதன் பழையபடி குரங்காக மாறுகிருன். சண்டித்தனம் செய்யும் குழந்தைகளை 'குரங்கு' எனத் தாய்மார்கள் கூறுவார்கள். உண்மையிலேயே ஒரு குழந்தை பிறந்ததும் கருங்குரங்காக மாறிவிட்டது. இந்த சம்பவம் தோஹாத் கிராமத்திலுள்ள ஒரு சிற்றூரில் நடைபெற்றிருக்கிறது. அந்த ஊரிலுள்ள ஒரு ஸ்திரீக்கு ஒரு குழந்தை பிறந்தது. பிறந்து நாலு மணிநேரத்துக்குள் அது கருங்குரங்காக மாறிவிட்டது. நல்லகாலம், உடனேயே செத்துப் போய்விட்டது. அநுமாரின் சந்ததியோ என்னவோ? இந்தக்குழந்தை இருந்தால் குரங்கைப்பெற்ற பெண்குரங்கே என எல்லோரும் சொல்லுவார்கள் அந்த ஸ்திரீயை பார்த்து. அதற்கு இடமில்லாமல் குரங்குக் குழந்தை வானுலகம் போய்விட்டது பாக்கியமே.

---

### வகுப்பு வாதிகளுக்கு உபசாரமில்லை

ஹிந்து மகாசபை, லீக், இவற்றைச் சேர்ந்த வகுப்பு வாதிகளுக்கு அலகாபாத் ஜில்லா போர்டின் சார்பில் உபசாரப் பத்திரமேதுவும் வாசித்துக் கொடுப்பதில்லையென போர்டு தீர்மானித்திருக்கிறது.

---

சோனேபூர் சத்யாகிரஹப் பயிற்சி முகாமில் மொத்தம் 436 மைல் நீளமான கதர் நூல் நூற்கப்பட்டிருக்கிறது. சோனேபூரிலிருந்து பிடித்தால் சேவாக் கிராமம் வரையிலும் எட்டுமாம்.

---

## சென்னை ரேடியோ

### மே. 9-உ வியாழன்

5-0 மருத்துவக்குடி எஸ். ராஜகோபால ஐயர்-பாட்டு, 5-20 எம். கன்னய்யா நாயுடு-நாகஸ்வரம், 6-30 ராணிபத்மினி-தமிழ் நாடகம், 7-50 எம். கன்னய்யா நாயுடு, 8-20 'ஆகாய விமானப் படையெடுப்பு' 'கொன்டினன்டல்' தயாரித்தது, 8-30 மருத்துவக்குடி எஸ். ராஜகோபால ஐயர்-பாட்டு, 9-30 ஸ்ரீமதி கே. ஜானகி-பாட்டு, 10-0 வரகூர் முத்துஸ்வாமி ஐயர்-பிடில்.

### 10-உ வெள்ளி

4-0 வி. ஸி. வைத்தியநாதன்-பாட்டு, 5-20 தேசமங்கலம் சுப்ரமணிய அய்யர்-வீணை, 6-30 டி. வி. சிவசிதம்பர ஐய்யர்-புல்லாங்குழல், 7-0 'உலக விவகாரங்கள்' ஏ. ஜீ. வெங்கடாசாரி தமிழில் பேசுவார், 7-50 வி. ஸி. வைத்தியநாதன்-பாட்டு, 8-30 தேசமங்கலம் சுப்ரமணிய அய்யர்.

### 11-உ சனி

5-20 ஹொன்னப்ப பாகவதர்-பாட்டு, 6-30 ஹொன்னப்ப பாகவதரும், ஸ்ரீமதி ராஜலக்ஷ்மியும்- இசைப்பாட்டு, 7-50 மஹாராஜபுரம் விசுவநாத அய்யர்-பாட்டு.

### 12-உ ஞாயிறு

4-0 க்ரோவி ஸத்யநாராயண-பாட்டு, 5-20 பி. என். கோவிந்தஸ்வாமி பிள்ளை-நாகஸ்வரம், 6-15 ஆரண்யரோதனம், 6 30 ஸ்ரீமதி ஏ. சுந்தரம்- பாட்டு, 7-50 ஸ்ரீமதி ஸரஸ்வதி பலராமன் பாட்டு, 8-30 க்ரோவி ஸத்யநாராயண பாட்டு, 10-0 கே. வி. ஜயராமய்யர்-பிடில்.

### 13-உ திங்கள்

4-0வி. ஸ்ரீநிவாஸ அய்யங்கார்-பாட்டு 5-20 ஸ்ரீமதி எஸ். பி. ஹம்ஸதமயந்தி-பாட்டு, 6-40 ஸ்ரீமதி ருக்மிணி சௌந்தரராஜன்-பாட்டு, 7-50 ஏ. கே. சுப்பராவ்-புல்லாங்குழல், 8-30 ஸ்ரீமதி எஸ். பி. ஹம்ஸதமயந்தி.

### 14-உ செவ்வாய்

4-0 டி. எஸ். மஹாதேவ அய்யர்-பாட்டு, 5-20 ஸ்ரீமதி மீனுக்ஷி ராமகிருஷ்ணன்-பாட்டு 6-30 'திருவாழ்த்தான்' குமரன் எழுதியது. 7-50 பாருபல்லி ராமகிருஷ்ணய்ய பந்துலு-பாட்டு, 9.30 எம். பாலகிருஷ்ண அய்யர்-பிடில், 10-0 ஸ்ரீமதி மீனுக்ஷி ராமகிருஷ்ணன்.

### 15-உ புதன்

4-ஸ்ரீமதிகள் கமலாவும், விமலாவும்-பாட்டு, 5-20 ஆர். என். தம்பி- வீணை, 6-30 ஸ்ரீமதிகள் கமலாவும், விமலாவும், 7-0 'யுத்த தளவாடங்கள்' ஜே. எஸ். பொன்னய்ய நாடார் பேசுவார், 7-50 டி. எம். கிருஷ்ணஸ்வாமி அய்யர்-பாட்டு, 8-30 டி. கே. பாலகணேச அய்யர்-புல்லாங்குழல், 9-30 'ராஜ்யாபிஷேகம்' ஸ்ரீமதி ஸி. சரஸ்வதிபாய் ஹரிகதை செய்வார்.

---

கெப்போலியனுக்கு ஹெலினுத்தீவு; கெய்சருக்கு ஹாலந்திலுள்ள டூர்ன் என்னுமிடம்; ஹிட்லருக்கு எந்த இடம் காத்திருக்கிறதோ தெரியவில்லை. நரகத்தில்கூட அவருக்குக் காலியிராதென்பது நிச்சயம்.

---

## பஞ்சாங்கம்

| பர்மா. | இங் | தமிழ். | வாரம். | விக்கிரம-ஞு இங்-1940. பர்மா-1302. |
|---|---|---|---|---|
| கசௌலாசான் 4 | 1940 மே-மீ 9 | விக்கிரம-ஞு சித்திரை-மீ 27 | வியா | துவி-31-40. ரோ-47-53. மரணயோகம் |
| 5 | 10 | 28 | வெள் | திரு-31-18. மிரு-48-43. சித்தயோகம். |
| 6 | 11 | 29 | சனி | சது-29-22. திரு-48-20. சித்தயோகம். |
| 7 | 12 | 30 | ஞாயி | பஞ்-26-23. புன-46-49. மரணயோகம். |
| 8 | 13 | 31 | திங் | சஷ்-22-25. பூச-44-48. மரணயோகம். |
| 9 | 14 | 1 | செவ் | சப்-17-42. ஆயி-41-22. சித்தயோகம். |
| 10 | 15 | 2 | புதன் | அஷ்-12-22. மக-37-44. அமிர்தசித்தயோகம். |
| 11 | 16 | 3 | வியா | நவ-6-41. பூர-33-51. மரணயோகம். |

## நடப்பு வட்டி விகிதங்கள்

| மாதம். | நாள். | சென்னை | | | ரெங்கூன் | | | பினங்கு | | | சிங்கப்பூர் | | | செய்கோன் | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| வெகுதானிய பங்குனி | 31 | 0 | 6 | 6 | 0 | 4 | 9 | 0 | 4 | 6 | 0 | 4 | 0 | 0 | 4 | 0 |
| பிரமாதிசித்திரை | 31 | 0 | 6 | 9 | 0 | 4 | 0 | 0 | 4 | 6 | 0 | 4 | 3 | 0 | 4 | 0 |
| வைகாசி | 31 | 0 | 6 | 6 | 0 | 5 | 0 | 0 | 4 | 6 | 0 | 4 | 3 | 0 | 4 | 0 |
| ஆனி | 32 | 0 | 6 | 6 | 0 | 5 | 6 | 0 | 4 | 3 | 0 | 4 | 3 | 0 | 4 | 0 |
| ஆடி | 31 | 0 | 6 | 0 | 0 | 4 | 0 | 0 | 4 | 3 | 0 | 4 | 3 | 0 | 4 | 0 |
| ஆவணி | 31 | 0 | 5 | 6 | 0 | 4 | 0 | 0 | 4 | 3 | 0 | 4 | 3 | 0 | 4 | 0 |
| புரட்டாசி | 31 | 0 | 5 | 6 | 0 | 4 | 0 | 0 | 4 | 3 | 0 | 4 | 3 | 0 | 4 | 0 |
| அற்பசி | 29 | 0 | 5 | 6 | 0 | 4 | 0 | 0 | 4 | 3 | 0 | 4 | 3 | 0 | 4 | 0 |
| கார்திகை | 30 | 0 | 5 | 6 | 0 | 4 | 0 | 0 | 4 | 6 | 0 | 4 | 3 | 0 | 4 | 0 |
| மார்கழி | 29 | 0 | 5 | 9 | 0 | 4 | 6 | 0 | 4 | 6 | 0 | 4 | 0 | 0 | 4 | 0 |
| தை | 30 | 0 | 6 | 0 | 0 | 5 | 0 | | | | 0 | 4 | 0 | 0 | 4 | 0 |
| மாசி | 30 | 0 | 6 | 0 | 0 | 4 | 9 | | | | 0 | 4 | 0 | 0 | 4 | 0 |
| பங்குனி | 30 | 0 | 6 | 6 | 0 | 5 | 0 | | | | | | | 0 | 4 | 0 |

REGNO. M. 3888 12 PAGES PRICE 1 ANNA

SUBSCRIPTIONS
Inland Annual ... Rs. 5
Burma Annual ... Rs. 6
Foreign Annual ... Rs. 7

ADVERTISEMENTS
One Inch S. C. per insertion As. 8
Court Notice per Inch Re. 1
Long Standing Advertisements given Concessions

# ஊழியன்

The "Oolian," A Nationalist Tamil Weekly

VOL. 19 | KARAIKUDI, 9TH MAY 1940, THURSDAY | NO. 45

## காங்கிரஸ் பொதுக் காரியதரிசி கட்டளை

### சிறைக்குச் செல்பவர்களே பதவி வகிக்க வேண்டும்

காங்கிரஸ் பொதுக் காரியதரிசி ஆச்சாரிய கிருபாலினி, எல்லா மாகாணக் காங்கிரஸ் கமிட்டிகளுக்கும் அனுப்பியுள்ள ஒரு சுற்றறிக்கையில் குறிப்பிட்டிருப்பதாவது:—

இப்போதைய கொள்கைப்படி நடந்து கொள்ள இஷ்டப்படாதவர்கள் நிர்வாகப் பதவிகளை ஏற்றிருப்பது விரும்பத்தக்கதல்ல. சத்யாகிரக பிரதிக்ஞையில் கையெழுத்திடமறுக்கும் காங்கிரஸ் நிர்வாகக் கமிட்டிமெம்பர்கள் தாங்களாகவே பதவிகளை ராஜினுமா செய்து விடவேண்டும். ஒவ்வொரு காங்கிரஸ் கமிட்டியும் தனது வழக்கமான வேலைகளோடு சத்யாகிரக ஏற்பாட்டு வேலைகளையும் செய்ய வேண்டுமென்று காரியக்கமிட்டி இப்பொழுது முடிவுசெய்திருக்கிறது. எந்தக் காரணத்தை முன்னிட்டேனும் சத்யாகிரகப் பிரதிக்ஞையில் கையெழுத்திட விரும்பாதவர்கள் ராஜினுமா செய்து, சிறைக்குச் செல்லத்தயாராயிருப்பவர்களுக்கு காலிஸ்தானத்தை வகிக்க அநுமதிக்கவேண்டும் என்று காங்கிரஸ் கமிட்டி சமீபத்தில் முடிவு செய்திருக்கிறது.

### ரிப்போர்ட் அனுப்புக

காங்கிரஸ் மந்திரி சபைகள் ராஜினுமாச் செய்தபின்னர் மாகாணங்களில் யார்யாருடைய பிரஜா உரிமைகளெல்லாம் ஒடுக்கப்பட்டதென்பதை ரிப்போர்ட் செய்யவேண்டும் என சுற்றறிக்கையில் காரியதரிசி குறிப்பிட்டிருக்கிறார். தொடுக்கப்பட்டவழக்குகள், கைதிகள், தடைகள் முதலியவைகளைப் பற்றி பூரா தகவலையும் காங்கிரஸ் காரியக்கமிட்டி, அதன்கூட்டத்தில் ஆலோசிக்கும் என்று காரியதரிசி கூறுகிறார்.



வியாபாரத்திற்கு அழகு விளம்பரமே!!

## ஒழுங்கு மீறிய நடவடிக்கைகள் இருந்தால்?

காங்கிரஸ் ஸ்தாபனங்களில் கட்டுப்பாடு எவ்விதம் நிலை நிறுத்தப்பட்டு வருகிறது என்பதைப்பற்றி அறிவிக்குமாறு எல்லா மாகாணக் காங்கிரஸ் கமிட்டிகளையும் காரியதரிசி கேட்டிருக்கிறார்.

அறிவிக்க வேண்டியவிஷயங்கள்:—

ஒழுங்கு கட்டுப்பாடு மீறிய நடவடிக்கைகள் ஏதாவது இருக்கிறதா? அப்படியிருந்தால் அது எவ்விதத்தில் பிரயோகிக்கப்படுகிறது. காங்கிரஸ் ஸ்தாபனங்களில் ஏதாவது தனி கோஷ்டிகள் இருக்கின்றனவா? அப்படியானால் அவையாவை? இக்கோஷ்டிகளின் வேலைகள் காங்கிரஸுக்கு இடையூருக இருக்கின்றனவா?

## ஹிட்லரை பிடி இந்தா 10 லக்ஷம் டாலர்

ஹிட்லரை உயிருடன் சர்வதேச சங்கத்தாரிடம் பிடித்துக் கொடுப்பவருக்கு 10 லக்ஷம் டாலர் வெகுமானம் அளிப்பதாக அமெரிக்கர்களால் தமக்கு அதிகாரமளிக்கப்பட்டிருப்பதாக ஸ்ரீ சாமுவேல் சர்ச் என்ற அமெரிக்கர் அறிவிக்கிறார்.

ஹிட்லர் இப்போது நடக்கும் யுத்தத்தின் கடமைகளை வற்புறுத்தியும் அதனைப் பொறுத்தே ஜெர்மனி வாழ்வதும் வீழ்வதும் இருக்கும் என்று தமது ராணுவ அதிகாரிகள் முன் பேசியிருக்கிறார்.

## இடமாற்றம்

T. K. V. சாமி ஆயுர்வேத ஆஸ்பத்திரி 19—4—40 முதல் செக்காலை ரோட்டிலுள்ள க. தெ. க. அள. பங்களாவுக்கும் பொன்னுச்சாமி செட்டியார் மரக்கடைக்கும் மத்தியிலுள்ள சந்தில் மு. அ. மெ. மெய்யப்பனம்பலகாரருடைய கட்டிடத்திற்கு மாற்றப்பட்டிருக்கிறது.



Edited, Printed and Published by Raya Chockalingam for The India Publications Ltd., at the Oolian Power Press, Karaikudi.

